# கொலம்பியா ரிகார்டுகள்



செம்பை வைத்தியநாத பாகவதர்

GE. 6372

என்னில் கனிந்த

(சங்கராபரணம்) 2 பாகங்கள்



T. N. விஜயலக்ஷ்மி

GE. 6376

என்ன வென்றழைக்க நீ

(ஷண்முகப்ரியா) 2 பாகங்கள்





கான பாஸ்கர

சேலம் D. செல்லம் அய்யங்கார்

GE. 6361

பருல ஸேவ..

(நடபைரவி) 2 பாகங்கள்



ஸங்கீத பூஷணம்

R. பிச்சுமணி அய்யர்

வீணை

GE. 6374 { ஸாரஸமுகி (கௌடமல்லார்)
முருகனென்றழகுமே (ராகமாலிகை)

**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ். 2.**

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்




எனெஸ்கே பிலிம்ஸ்
சிறந்த சமூக சித்திரம்

N.S. கிருஷ்ணன் · T.A. மதுரம் நடிக்க

# பைத்தியக்காரன்?

மற்றும்
S.R. ஜானகி · S.V. சகஸ்ரநாமம் · D. பாலசுப்ரமணியம் · M.G. ராமச்சந்திரன்
N.S.K. நாடக சபா கோஷ்டியுடன் நடித்தது...

டைரக்ஷன் கிருஷ்ணன் பஞ்சு · கதை, வசனம் சகஸ்ரநாமம் · ஸ்டுடியோ நியூடோன்

திருச்சி: எம்மர் பிலிம்ஸ்.....கரூர்.
ஸேவாஸ் டிஸ்ட்ரிப்யூஷன்ஸ். ராயப்பேட்டை..சென்னை.

மதுரை: லக்ஷ்மி பிலிம்ஸ் சர்க்யூட்..கரூர்
சென்னை: ஜோதி பிலிம்ஸ் கார்ப்பரேஷன் ஸேன்தோம்..சென்னை.
சேலம்: வீனஸ் பிலிம் டிஸ்ட்ரிபியூடர்ஸ். கரூர்

கோயம்புத்தூர்: ராஜா பிலிம்ஸ் சர்க்யூட் லிமிட்டெட், பொள்ளாச்சி.

# அரசியல் நிர்ணய சபை

## (வெஸ்டன் வெளியீடு)

ஆசிரியர் :

**டி. வி. சிவஸ்வாமி**

அரசியல் நிர்ணய சபையின் வரலாற்றையும், அதன் அமைப்பையும் ஆசிரியர் மிக்க அழகாக எழுதியிருக்கின்றார்.

புத்தகத்தின் முகப்பில் அரசியல் நிர்ணய சபைக் கட்டடமும், நேருவின் படமும் அழகு செய்கின்றன.

**விலை அணா 8**

தனிப் புத்தகம் வேண்டுவோர் 9 அணா ஸ்டாம்பு அனுப்புக. மொத்தமாக வரவழைக்கும் வியாபாரிகளுக்குக் கமிஷன் கொடுக்கப்படும்.

**முத்தமிழ் நிலையம்**

**75, வரதா முத்தியப்பன் தெரு**

**சென்னை - 1**

---

## மூக்கு சம்பந்தமான உபத்திரவங்களை

### முப்பது விநாடிகளில் ஒழியுங்கள்!



ஜலதோஷத்தாலோ, தலை பாரத்தாலோ மூக்கு உபத்திரவம் ஏற்பட்டால் கார்ஸோட்ரைனை உபயோகியுங்கள். நாசித் துவாரத்தில் குழாயை வைத்து அதன் இன்பமான சுவாசத்தை உள்ளிழுக்கவும். அது சளியைக் காயச் செய்து நாசியிலுள்ள மெல்லிய தோலின் வீக்கத்தை வாடச் செய்வதால் உடனேயே உங்களுக்கு நிவாரணம் அளிக்கும். மற்ற மருந்துத் துளிகளாலோ, சொட்டுக்களாலோ, ஸ்ப்ரேக்களாலோ இலேசில் அடைய முடியாத இடத்தை கார்ஸோட்ரைன் உட்சென்று தாக்குவதால் அது மிகவும் இன்றியமையாததாய் விளங்குகிறது. கார்ஸோட்ரைன் குழாய் மிகவும் சௌகரியமானது. எப்பொழுதும், எங்கும் உபயோகிக்கலாம். ஒரு குழந்தைகூட பயமில்லாமல் உபயோகிக்கக் கூடியது.

மூக்கு உபத்திரவங்கள், தலை பாரம், சளி ஜுரம் இன்னும் சுவாசாசய நோய்களுக்கெல்லாம் சிபாரிசு செய்யப்படுவது. எல்லா கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்.



# கல்கி

## பொருளடக்கம்

மலர் 6 | இதழ் 52

1947 ஜூலை 27

சர்வஜித்து ஆடி 11





தமிழ் நாட்டில் ஆலயத் திறப்பு வைபவங்கள் இன்னும் முடிந்தபாடில்லை. சென்ற ஒரு வருஷ காலமாகத் தினந்தோறும் பத்திரிகை வந்ததும், "இன்று எந்தக் கோவில் திறந்ததோ?" என்று கேட்டுக் கொண்டே பத்திரிகையைப் பிரிப்பது வழக்கமாகிவிட்டது. ஆனால் வடநாட்டிலிருந்து இத்தகைய செய்திகள் ஒன்றும் வருவதில்லை. இதன் காரணம் என்ன? தென்னாட்டில் ஆயிரக் கணக்கான கோவில்கள் இருப்பதும், வட நாட்டில் ஆலயங்கள் அவ்வளவு அதிகம் இல்லை என்பதுந்தான்.

தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கான ஆலயங்கள் இருக்கவே செய்கின்றன. எனினும், மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயிலுக்குத் தனி மகிமை உண்டு.




ஜகன் மாதாவாகிய பார்வதி தேவி மயில் உருவம் எடுத்து இறைவனைப் பூஜித்த புண்ணிய க்ஷேத்திரம் அல்லவா? தமிழ்மறை தந்த திருவள்ளுவர் பிறந்த ஸ்தலம் அல்லவா? அழகழகான பல தமிழ்க் கீர்த்தனங்களுக் குரியவரான ஸ்ரீ கபாலீசுவரர் கோயில்கொண்ட பதி அல்லவா?

தென்னாட்டுக் கோவில்களுக்கு மிகவும் பெருமை தருவது அவற்றின் முன் வாசல் கோபுரமே ஆகும். கலைமகள் குடி கொண்டுள்ள இடங்களைக் குறிப்பிடும் போது, "சில்ப சித்திரம் கோபுரம் கோயில் - ஈதனைத்தின் எழிலிடை உற்றாள்!" என்று பாரதியார் பாடினார். எல்லாக் கோபுரங்களும் எழில் உள்ளவை என்றாலும், திருமயிலைக் கோபுரத்தின் அழகுக்கு ஈடு மிக்க இணையுமில்லை என்று சொல்லலாம். அத்தகைய காபாலியின் கோபுரம் ஜீரணமாகிச் சிதைந்து உதிரத் தொடங்கி யிருப்பதை அரசூர் பார்த்தசாரதி முதலியார் என்னும் பக்த சிரோமணி பார்த்தார். ஆலயங் கட்டுவதும் கும்பாபிஷேகம் செய்விப்பதுமே வாழ்க்கைப் பணியாகக் கொண்ட ஸ்ரீ முதலியார் அவர்கள் கபாலி கோயிலின் பரம்பரை வொர்ச்சரியரான ஸ்ரீ சுவாமிநாத குருக்களின் ஒத்துழைப்புடன் திருமயிலை ஆலய கோபுரத்தைப் புதுப்பித்துக் கட்டும் திருப் பணியை மேற்கொண்டார். மேற்படி ஆலய கோபுர கைங்கரியத்துக்காக நாளது ஆகஸ்டு மீ 3வ ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் சங்கீதக் கச்சேரி நடைபெறுகிறது. காணக் கோடிக் கண்கள் வேண்டிய கபாலியின் கைங்கரியத்துக்காகக் கேட்க ஆயிரம் காதுகள் வேண்டும் எனக்கூடிய பாட்டுக் கச்சேரி நடக்கப் போகிறது. கற்பகாம்பிகையின் அருளால் கோபுர கைங்கரியம் நன்கு நிறைவேறுமென்று நம்புகிறோம்.



மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 52

# என்ன சேதி?

## சுதந்திரத் திருநாள்

ஆகஸ்டு மாதம் 15-ந் சுதந்திரத் திருநாள் கொண்டாட வேண்டுமென்று தேசத்தின் மாபெருந் தலைவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். கொண்டாடும் வழிகளையும் பொதுவாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். இமயம் முதல் குமரி வரையில் அன்று ஒரே கொண்டாட்டமாயிருக்கும் என்பதில் ஐயமில்லை. சுதந்திரத் திருநாள் கொண்டாடுவதற்கு மாகாண காங்கிரஸ் சர்க்கார்கள் சில யோசனைகளைச் செய்து வருவதாகத் தெரிகிறது. பம்பாய் காங்கிரஸ் சர்க்கார் அரசியல் கைதிகளையெல்லாம் சுதந்திரத் திருநாளை முன்னிட்டு விடுதலை செய்ய யோசித்து வருவதாக ஒரு செய்தி கூறுகிறது. இந்த யோசனையைச் சென்னை மாகாண காங்கிரஸ் சர்க்காருக்கும் சிபார்சு செய்கிறோம். இந்த மாகாணத்துச் சிறைகளில் தண்டனை பெற்ற சில அரசியல் கைதிகளும் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் வைத்திருக்கும் பல அரசியல் கைதிகளும் இருக்கிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்தவர்கள். புதுடில்லியில் தேசிய சர்க்கார் ஏற்பட்டபிறகு பொது உடைமைக் கட்சியாரின் போக்குத் தவறானது என்று நாம் கண்டித்து வந்திருக்கிறோம். எனினும், அவர்களை இந்தச் சந்தர்ப்பத்தில் விடுதலை செய்து சுதந்திர இந்தியாவில் அவர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்று பார்ப்பது மிக்க அவசியமாகும். பொது உடைமைக் கட்சியாரின் தற்போதைய காரியங்கள் நமக்குப் பிடிக்காவிட்டாலும் அவர்கள் அரசியல் கைதிகள் என்பதை நாம் மறக்கக் கூடாது. அன்றியும், அவர்களில் மிகப் பலர் தன்னலமற்று ஏழை மக்களுக்குத் தொண்டு செய்து வந்தவர்கள் என்பதையும் நாம் மறக்க முடியாது. சிறையில் உள்ள அரசியல் கைதிகளையெல்லாம் விடுதலை செய்வதுடன், இப்போது கோர்ட்டுகளில் நடந்து வரும் அரசியல் வழக்குகளை வாபஸ் பெறுவதும் உசிதமாயிருக்கும்.

## தாழி உடைந்தது!

எழுதுவதற்குக் கையும் கூசுகிறது. நினைப்பதற்கு மனமும் நடுங்குகிறது.

இந்தியாவுடன் போட்டி போட்டுக் கொண்டு சுதந்திரப் பாதையில் வெகு வேகமாக முன்னேறி வந்த நம்முடைய சகோதர தேசமாகிய பர்மாவுக்கு நேர்ந்துவிட்ட மாபெரும் கஷ்டத்தையே குறிப்பிடுகிறோம். அத்தகைய கொடிய பயங்கர சம்பவம் உலக சரித்திரத்திலேயே மிக அபூர்வமானது என்று சொல்ல வேண்டும்.

பர்மிய மக்களின் எல்லையற்ற அன்புக்குப் பாத்திரமானவரும் வீரமாத் தலைவரும் சமீபத்தில் நடத்திய பொதுத் தேர்தலில் பெரும் வெற்றியடைந்து பர்மிய சர்க்காரை அமைத்தவருமான ஊ அவுங் ஸானையும் அவருடைய சகாக்களில் பெரும்பாலோரையும் கூண்டோடு கைலாசமாக யாரோ சில பாதகர்கள் சுட்டுக் கொன்றுவிட்டனர் என்னும் செய்தியைக் கேட்டு உலக முழுவதும் பயங்கரத்தில் ஆழ்ந்தது. முக்கியமாக பாரதநாடு அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டது. வெண்ணெய் திரளும் சமயத்தில் தாழி உடைந்தாற்போல, பர்மா நாடு சுதந்திர வாசலில் நிற்கும் சமயத்தில் இத்தகைய ஒரு பெரு கஷ்டத்துக்கு உள்ளாகிக் கண்ணும் கண்ணீருமாய்க் கதறிக் கொண்டிருக்கும் நமது பர்மிய சகோதரர்களுக்கு நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## வாழ்க அவுங் ஸான்!

ஜப்பானிய ஏகாதிபத்தியத்தையும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையும் ஒன்றன் பின் ஒன்றாக எதிர்த்துப் போராடி வெற்றி மாலை சூடிய ஜெனரல் அவுங் ஸானைப் போன்றவர்களுக்கு உண்மையில் மரணம் என்பதே இல்லை. அவர்கள் எக்காலத்தும் மங்காப் புகழுடன் சிரஞ்சீவியாக வாழ்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. முப்பத்திரண்டு வயதுக்குள்ளாக ஒரு பெரிய தேசத்தின் சுதந்திர இயக்கத்துக்குத் தலைமை வகித்து வெற்றியின் வாசல்வரை சென்ற மகா வீரர்கள் உலக சரித்திரத்திலே எத்தனை பேர் என்று எண்ணினால் ஒரு கை விரல்களுக்கே வேலை இராது.

இரண்டாவது மகாயுத்தம் முடிந்த பிறகு, சுதந்திரம் கேட்ட பர்மாவுக்கு பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு பெரிய பட்டை நாமத்தைக் குழைத்துப் போடப் பார்த்தார்கள். "சுதந்திரமாவது, ஒன்றாவது! நீங்கள் சுதந்திரம் கேட்டதே குற்றம். அதற்கு இதோ தண்டனை: 1947 வரை பர்மாவுக்குச் சட்ட சபை கிடையாது! மந்திரி சபையும் கிடையாது! கவர்னர் ஏதேச்சாதிகாரம் நடத்துவார், போங்கள்!" என்றார்கள் இறுமாப்புடன். அந்தச் சமயத்தில் ஜெனரல் அவுங் ஸான் எங்கிருந்தோ முளைத்து வந்தார்; பர்மா மக்களுக்குத் தலைமை பூண்டார். அவர் தொடங்கிய சுதந்திரப் போரியக்கத்தைக் கண்டதும், பிரிட்டிஷ் சர்க்கார் இனித் தங்கள் பாச்சா பலிக்காது என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு கீழே இறங்கி வந்தார்கள். பர்மாவுக்குப் பூரண சுதந்திரம் அளிக்க ஒப்புக்கொண்டார்கள்.



அதற்குப் பூர்வாங்கமாக, பர்மிய மக்கள் ஒரு அரசியல் நிர்ணய சபையைக் கூட்டித் தங்களுக்குப் பிடித்தமான அரசியலைத் தாங்களே வகுத்துக் கொள்ளலாம் என்று கூறினார். அதற்கிணங்க, பர்மாவிலே அரசியல் நிர்ணய சபை கூடி, அரசியல் வகுக்கப்பட்டு வருகிறது. இன்னும் சிறிது காலத்திற்குள் பர்மா பூரண சுதந்திரம் அடைந்து விடும் என்றே எதிர்பார்க்கப்பட்டது. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், சுதந்திரக் கோவிலை அமைப்பதற்காக அரும்பாடு பட்ட வீரர் அந்தக் கோவிலின் கும்பாபிஷேகத்தைக் கண்ணாலே பார்க்க முடியாமல் அகால மரண மடைந்த துர்க்கதியைப் பற்றி என்னவென்று சொல்வது?

இத்தகைய பாதகப் படுகொலை செய்தவர்களும் அதற்குக் காரணமாயிருந்தவர்களும் ஆசியா முழுவதற்குமே அபகீர்த்தி உண்டாக்கி விட்டார்கள் என்று சொல்ல வேண்டும். "ஆசிய மக்கள் சுதந்திரத்துக்கு அருகதை யற்றவர்கள். அவர்களுக்குச் சுதந்திரம் கிடைத்தாலும் அதை அநுபவிக்கத் தெரியாது. ஒருவரை யொருவர் குத்திக் கொண்டும் வெட்டிக் கொண்டும் சுட்டுக் கொண்டும் சாவார்கள்" என்று ஐரோப்பிய சாதியார் பிரசாரம் செய்வதற்கு இது ஒரு உதவியாகும்.

ஈடுசெய்ய முடியாத மேற்படி மாபெரும் நஷ்டத்தைச் சமாளித்துக்கொண்டு, பர்மா தன்னுடைய லட்சியமும் அவுங் ஸானின் கனவுமாகிய பூரண சுதந்திரத்தை விரைவில் அடையுமென்று நம்புகிறோம்.

## விதியின் விசித்திரம்!

இந்தச் சமயத்திலே விதியின் விசித்திரத்தை எடுத்துக் காட்டும் ஒரு விஷயத்தை நேயர்களுக்கு நாம் நினைவூட்டுவது பொருத்தமாயிருக்கும். சுமார் இரண்டு வாரங்களுக்கு முன்பு ஜெனரல் அவுங் ஸான் "இந்தியாவின் எதிர்காலத்தைப் பற்றி எனக்கு அவ்வளவாக நம்பிக்கை இல்லை. ஏனெனில், அங்கே ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சண்டை போட்டுக்கொண்டிருக்கிறார்கள். இந்த வேற்றுமை காரணமாக இந்தியா பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டே இருக்கவும் நேரிடலாம்!" என்று சொன்னார். ஆனால், பாவம், இந்தியாவின் எதிர்காலத்தைப் பற்றி அவ்வாறு பேசியபோது தம்முடைய வருங்காலம் இப்படி ஆகப் போகிறது என்று அவர் கனவிலும் நினைத்திருக்க மாட்டார்! ஜெனரல் அவுங் ஸானையே சுடக் கூடிய அளவில் பர்மா தேசத்தில் பர்மியருக்குள்ளேயே இவ்வளவு துவேஷமும் பகைமையும் வளர்ந்திருக்கின்றன என்று யாரும் எண்ண

வில்லை. இந்தியாவின் எதிர்கால வாழ்வைப் பற்றி ஜெனரல் அவுங் ஸான் சந்தேகப்பட்டது போக, இப்போது பர்மாவின் எதிர்காலத்தைப் பற்றி உலகமே சந்தேகப்பட இடம் ஏற்பட்டு விட்டது. பர்மிய மக்கள் பூரண சுதந்திரத்துக்குத் தகுதியற்றவர்கள் என்று சொல்லவும் சிலர் முன்வரக் கூடும். விதியின் விசித்திர கதிக்கு முன்னால் மானிடரின் யோசனைகள் எவ்வளவு அற்பமாகி விடுகின்றன!

## “மூடித் தொலையுங்கள்!”

மேற்கண்ட தலைப்புடன் 11-7-47 தேதி “வெள்ளி மணி”யில் ஒரு கடிதம் வெளியாகியிருந்தது. புண்ணியஸ்தலமாகிய திருவையாற்றில் தமிழ் ஆசிரியர்கள் தயாரிக்கப்பட்டு வரும் தமிழ்க் கல்லூரியில் எவ்வளவு இலட்சணமாகத் தமிழ் கற்பிக்கப்பட்டு வருகிறதென்பதை மேற்படி கல்லூரி மாணவர் ஒருவர் அழகாக வர்ணித்து எழுதியிருந்தார். தமிழ்க் கல்லூரியில் தமிழ் வித்வான் பரீட்சைக்குப் படிக்கும் மாணாக்கர் 160 பேரில் 120 பேர்களும் கருஞ் சட்டை இயக்கத்தினர் என்றும், தமிழ் ஆசிரியன்மார் ஆறு பேரில் ஐந்து பேருக்கு வகுப்பில் நாஸ்திகப் பிரசாரம் செய்வதே வேலை என்றும் கூறியிருந்தார். மற்ற நாற்பது மாணவர்களில் யாரேனும் திருநீறு பூசத் துணிந்தாலும் தேவாரம் திருவாசகம் ஓதத் துணிந்தாலும் அவர்கள் கதி அதோ கதிதான் என்றும் எழுதியிருந்தார். “வெள்ளிமணி”யின் தலையங்கத்தில் மேற்படி நிலைமையை வன்மையாகக் கண்டித்து அத்தகைய நாஸ்திகப் பிரசாரம் செய்யும் ஆசிரியர்களுக்கு “கல்தா கொடுங்கள்!” என்றும் சொல்லியிருந்தது.

மேற்படி விஷயத்தை யொட்டித் “தினமணி”யில் வெளியான தலையங்கத்தில் இளம் மாணாக்கர்களிடையே அத்தகைய தீய துவேஷப் பிரசாரம் நடைபெறுவதைக் கண்டனம் செய்திருந்தது.

இன்னும் வேறு பல பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் ஆசிரியர்கள், முக்கியமாகத் தமிழ்ப் புலவர்கள், நடத்தி வரும் நாஸ்திகப் பிரசாரத்தைப் பற்றிப் பற்பல புகார்கள் பிரசாரமாகி வருகின்றன.

## கல்லூரியா? போர்க்களமா?

சென்னை மாகாணத்தின் தற்போதைய பிரதம மந்திரியும் கல்வி மந்திரியும் தெய்வ பக்தியுள்ள ஆஸ்திக சிரோமணிகள் என்று பெயர் பெற்றவர்கள். அவர்கள் மேற்படி புகார்களைப் பற்றி உடனே விசாரணை செய்து தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

தமிழ் வித்வான்களோ அல்லது ஆங்கில ஆசிரியர்களோ நடத்தும் நாஸ்திகப் பிரசாரத்தினால் கடவுளுக்கு ஆபத்து வந்து விடுமென்றோ, ஹிந்து மதத்துக்கு அபாயம் வந்துவிடுமென்றோ நாம் பயப்படவில்லை. கடவுள் தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்வார். ஹிந்து மதத்தில் நாஸ்திகப் பிரசாரம் இராமாயண காலத்திலிருந்தே நடைபெற்று வந்திருக்கிறது. எத்தனையோ நாஸ்திகப்பிரசாரப் புயல்களுக்கும் சண்டமாருதங்களுக்கும் ஈடு கொடுத்து ஹிந்து மதம் பிழைத்து இருந்து வருகிறது. நவநாகரிகம் வளர்ந்து விட்டதாகவும் கலி முற்றி விட்டதாகவும் சொல்லப்படும் இந்தக் காலத்திலேகூட, மயிலாப்பூர், மதுரை பழனி, திருச்செந்தூர் முதலிய ஸ்தலங்களில் நடக்கும் தேர் - திருவிழா உற்சவங்களுக்கு லட்சக் கணக்காய் வரும் ஜனக் கூட்டத்தைப் பார்த்தவர்கள் நாஸ்திகப் பிரசாரம் எவ்வளவு பலனற்றது என்பதை உணர்ந்து கொள்வார்கள்.

ஆனால், நமது கல்விக் கூடங்களில் ஆசிரியர்கள் நாஸ்திகப் பிரசாரம் செய்வதை வேறொரு முக்கிய காரணத்துக்காகவே நாம் ஆட்சேபிக்கிறோம். நாஸ்திகப் பிரசாரத்தின் பயனாக மாணாக்கர்களுக்குள்ளே கட்சிப் போராட்டங்கள் ஏற்படுகின்றன. அமைதி நிலவ வேண்டிய கல்விக் கூடங்கள் போர்க்களங்களாக மாறுகின்றன. இளம் பிள்ளைகளின் தூய உள்ளத்தில் துவேஷமும் பகைமையும் வளர்கின்றன.

தேசத்தின் எதிர்காலப் பிரஜைகளாகப் போகிற இளைஞர்களுடைய மனதிலே இத்தகைய தீய பகைமை எண்ணங்களை வளர்ப்பதைப் போன்ற தேசத் துரோகமான காரியம் வேறு எதுவும் இல்லை. தேசம் சுதந்திரம் அடையப் போகும் இந்தச் சமயத்தில் ஒற்றுமை, சகோதர நேயம் ஆகிய உயர் குணங்களை நமது இளைஞர் கூட்டத்தில் வளர்க்க வேண்டும். அதற்குப் பதிலாகத் துவேஷத்தையும் குரோதத்தையும் வளர்க்கும் பள்ளிக்கூடங்களையும் கலாசாலைகளையும் நடத்திக் கொண்டிருப்பதைக் காட்டிலும் அவற்றை அடியோடு மூடி விடுவதே நலமாகும்.

# புத்திர சோகம்


அன்னை பர்மாவின் மகுடாபிஷேக
வைபவத்தைக் கண்டு களிக்க வந்த
மக்கள், அவளது அருமை
மகனின் பிரேதத்தைக்
கண்டு கதறுகிறார்கள்

# பரோபகாரம்!



பாவம், தயவு செய்து அவனுக்கு உயிர்ப்பிச்சை கொடு
1945-46
ஜாக்கிரதை! இனி திரும்பி வந்தால்....?




பிரிட்டிஷ், அமெரிக்கா டானிக் மருந்துகள் (யுத்த தளவாடங்கள்) உள்ளே செல்லுகின்றன




ஆசியா விடுதலை இயக்கம்
இப்போது வா, ஒரு கை பார்த்து விடுகிறேன்!

# பெரிய சோதனை

சிருஷ்டி அழகைப்பற்றிய வர்ணனைக்குக் கரையே இல்லை.

எனினும் சிருஷ்டியில் எண்ணிக்கையற்ற விசித்திரங்கள் இருப்பது போன்று, எண்ணிக்கையற்ற விகாரங்களும் இருக்கத்தான் செய்கின்றன.

பசுவையும் மானையும் சிருஷ்டித்த கடவுள்தான் புலியையும் கரடியையும் சிருஷ்டித்திருக்கிறார். புஷ்பங்களையும் பழங்களையும் சிருஷ்டித்த கடவுள்தான் முட்செடிகளையும் விஷப்பூண்டுகளையும் சிருஷ்டித்திருக்கிறார். மயில்களையும் குயில்களையும் படைத்த இறைவனே கழுகுகளையும் கோட்டான்களையும் படைத்திருக்கிறார்.

மகாத்மா காந்தி போன்ற சாந்த மூர்த்திகளை உலகிற்கு ஈந்துள்ள ஈசன்தான், ஹிட்லர் போன்ற யுத்த மூர்த்திகளையும் படைத்தார்.

சாதுவான பிராணிகள், காட்டு மிருகங்கள், விஷ ஜந்துக்கள் முதலியன மனிதனுடைய பல்வேறு குணங்களின் பிரதி பிம்பங்களே என்பது, உலகப் பிரசித்தி பெற்ற ஒரு பிரஞ்சு நூலாசிரியரின் சித்தாந்தமாகும்!

சாதாரணமான புல்லையும் வைக்கோலையும் தின்னும் பசுக்கள் உலகிலே ஈடு இணையில்லாத ஜீவசக்தியுள்ள பாலைக் கொடுத்து, மனித வர்க்கத்தையே உய்விக்கின்றன.

அதுபோலவே, எளிய வாழ்க்கை நடத்தும் புருஷோத்தமர்கள் கோடிக் கணக்கான ஜனங்களுக்கு ஜீவசக்தியை உண்டுபண்ணும் அதிசயத்தை நேரில் பார்த்து வருகிறோம்.

புலி, ஓநாய் முதலிய துஷ்ட மிருகங்கள், தேவையுள்ளபோதும் தேவையில்லாத போதும், அதாவது பசித்த போதும் பசியாத போதும்கூட பிற ஜந்துக்களைக் கிழித்துக் கொன்று விடுகின்றன.

மனித வர்க்கத்திலும் ஏகாதிபத்திய வெறிகொண்ட அத்தகையோர் இருக்கிறார்கள்.

குப்பையில் மாணிக்கம் கிடப்பது போன்று, மனிதன் போற்றிப் புகழும் 'நன்றி' என்ற உயர்ந்த குணமானது நாயிடத்தில் காணப்படுகிறது.

பூஜ்யர்களான தலைவர்களை நாக்கில் நரம்பின்றித் தூற்றுவதன் மூலம் பல்லாயிரக் கணக்கான மக்களை மனோவேதனைக்குட்படுத்தும் விருச்சிக வர்க்கத்தைச் சேர்ந்த 'பிரமுகர்'களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

எனினும், பகுத்தறிவற்ற ஜந்துக்களுக்கு நல்ல குணத்தையோ, தீய குணத்தையோ மறைத்துக் கொள்ளும் சக்தியில்லை.

ஆனால், பகுத்தறிவுள்ள மனிதன் அழகிய வார்த்தைகளால் தன் விகார ரூபத்தை, அதாவது தீய குணத்தை மறைத்துக் கொள்ள முடிகின்றது.

• • •

உதாரணமாக, இந்தோனேஷியாவில் டச்சுத் துருப்புகளின் பிரதம தளபதியாக இருக்கும் லெப்டினண்ட் ஜெனரல் ஸ்பூர், அங்கு தற்போது ஏற்பட்டுள்ள கோரமான யுத்தத்தைப் பற்றி விடுத்துள்ள அறிக்கை அத்தகையதாகவே இருக்கிறது.

அன்று ஆட்டுக்குட்டியிடம் ஓநாய் என்ன கூறியதோ, அதைப் போலவே இருக்கிறது டச்சுத் தளபதியின் வாதமும்!

எளியாரை வாட்ட வலியார்,—அதாவது ஓநாய் வர்க்கத்தைச் சேர்ந்த மனிதப் பிறவிகள்—நியாயம் போல் தோன்றும்படி வாதிப்பது சகஜம்.

கொடிய அடக்கு முறைப் பயத்திலிருந்து கோடிக்கணக்கான மக்களை விடுவிப்பதே, தற்போது ஆரம்பமாகியுள்ள யுத்தத்தின் நோக்கமென்று அவர் பசப்புகிறார்.

ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்து வந்துள்ள டச்சுத் துருப்புகள் இந்தோனேஷிய மக்களைப் படுகொலை செய்து வருகின்றன. அப்படியிருக்க, டச்சுத் தளபதியின் மேற்படி கூற்றைப் பற்றி வியாக்கியானமே தேவையில்லை.

எந்த ஜனங்களை டச்சுத் துருப்புகள் படுகொலை செய்து வருகின்றனவோ, அந்த ஜனங்களைத்தான் கஷ்டத்திலிருந்து விடுவிக்கப் போவதாக டச்சுப் பிரதம தளபதி கூசாமல் கூறுகிறார்!

இந்தோனேஷ்யாவில் அக்கிரமமான போர் முடிந்து விட்டதென்றும், அத் தேசம் சுதந்திரம் பெறும் தறுவாயில் இருந்து வருவதாகவும் நினைத்துக் கொண்டிருந்த உலக ஜனங்களுக்கு, அங்கு இப்போது கோர யுத்தம் ஆரம்பமாகி விட்டது என்ற செய்தி பெரும் அதிர்ச்சியைக் கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இரண்டாவது உலக யுத்தம் முடிந்த பின் மீண்டும் இந்தோனேஷ்யாவில் தங்களுடைய ஆதிக்கத்தை ஸ்தாபிப்பதற்காக டச்சுக்காரர்கள் பல மாதங்கள் வரை முயன்றனர். கோர யுத்தம் செய்து இந்தோனேஷ்யர்களைப் பலி வாங்கினர். அந்த அக்கிரமத்துக்கு பிரிட்டிஷ் ராணுவமும் உதவி புரிந்தது. எனினும் இறுதியில் இந்தோனேஷ்ய வீரர்களின் தர்ம யுத்தமே வெற்றி பெற்று, டச்சுக்காரர்கள் தங்களுடைய போர்க்கோலத்தை விட்டுவிடும்படி நேர்ந்தது.

பின்னர், இந்தோனேஷ்யாவுடன் சமரசப் பேச்சு நடத்தி வந்த டச்சுக்காரர்கள் இப்போது திடீரென்று மகத்தான பலத்துடன் பரந்த முறையில் போர் தொடங்கி யிருப்பதிலிருந்து, அவர்கள் சமாதான வேஷம் போட்டுக் கொண்டே ஐரோப்பாவிலிருந்து அபரிமிதமாக யுத்த தளவாடங்களைத் தருவித்து வந்திருக்கிறார்கள் என்பது வெளியாகிவிட்டது.

ஏகாதிபத்திய வெறி பிடித்த அவர்களின் மேற்படி துரோகமானது இப்போது நிரபராதிகளான இந்தோனேஷ்ய மக்களுக்கு ஆபத்தாக முடிந்திருக்கிறது.

டச்சு — இந்தோனேஷ்யர்களுக்குள் பிரமாத தகராறு எதுவும் ஏற்பட்டுவிடவில்லை.

டச்சுக்காரர்கள் விதித்த பல நிபந்தனைகளையும்,—அநியாயமான நிபந்தனைகளையும்கூட இந்தோனேஷ்யக் குடியரசு சர்க்கார் ஒப்புக்கொண்டனர்.

அவர்கள் ஒப்புக்கொள்ள முடியாத இரண்டொரு நிபந்தனைகளை மூன்றாவது சாரரின் மத்தியஸ்தத்துக்கு விடவும் இசைந்தனர்.

ஆகையால், அந்நிலைமையில் டச்சு சர்க்கார் திடீரென்று பயங்கரமான போரை ஆரம்பிக்க வேண்டிய அவசியமே இல்லை.

மேற்படி யுத்தம் ஆரம்பமாகி யிருப்பதன் ஒரே காரணம் என்னவெனில், இந்தோனேஷ்யாவில் டச்சுக்காரர்கள் இழந்த ஆதிக்கத்தை மீண்டும் நிலைநிறுத்த வேண்டும் என்பதுதான்.

இன்று பல பிரச்னைகள் உலகத்தை வாட்டி வருகின்றன. அவற்றைத் தவிர ஒவ்வொரு தேசமும் ஒவ்வொரு மகத்தான பிரச்னையைச் சமாளித்தாக வேண்டி யிருக்கிறது.

இந்நிலைமையில் இந்தோனேஷ்யா மீது டச்சு சர்க்கார் கொடிய யுத்தம் தொடர்ந்து ஒரு புதிய பிரச்னையைக் கிளப்பி யிருப்பது மன்னிக்க முடியாத குற்றமாகும்.

* * *

சென்ற யுத்தத்தில் பிரிட்டனும் அமெரிக்காவும் உதவி புரியாதிருந்தால், ஐரோப்பாவின் படத்தில் ஹாலந்து இருக்கும் இடமே தெரியாமல் மறைந்திருக்கும்.

அப்படி யிருக்க, தன் பக்கத்தில் நியாயமோ அல்லது பலமோ எதுவும் இல்லாதிருக்கும் டச்சு சர்க்கார் இந்தோனேஷ்யா மீது படையெடுத்திருப்பது, உலக அமைதிக்கே பங்கம் விளைவிக்கக் கூடிய செய்கையாகும்.

ஏனெனில் சுதந்திரத்துடன் விளங்கும் இந்தியா, சிறு முதலிய ஆசிய நாடுகள் இந்தோனேஷ்யாவில் நடந்துவரும் டச்சுக்காரர்களின் அதர்ம யுத்தத்தைக் குறித்து மௌனமாக இருப்பதென்பது முடியாத காரியம்.

இவ்விஷயமாக இந்திய சர்க்கார் தங்கள் கவலையை பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் தெரிவித்திருப்பதே அதற்கு அத்தாட்சியாகும்.

தவிர, உலகில் அமைதி ஏற்படும் விஷயத்தில் தங்களுக்கு மிகுந்த அக்கறை இருப்பதாகக் கூறிக் கொண்டு வரும் அமெரிக்கா இவ் விஷயமாக என்ன செய்யப் போகிறதோ, தெரியவில்லை.

ஏதோ எதிர்காலத்தில் வரப்போவதாகக் கூறும் பொது உடைமைப் பூச்சாண்டியை எதிர்ப்பதற்காக ஐரோப்பிய நாடுகளுக்குக் கோடிக்கணக்கில் தொகை கொடுத்து உதவும் அமெரிக்கா, கண் முன் நடக்கும் டச்சுக்காரர்களின் அட்டூழியத்தைத் தடுக்க என்ன செய்யப் போகிறது என்பதைப் பொதுவாக உலக நாடுகளும், குறிப்பாக ஆசிய நாடுகளும்

சிரத்தையுடனே கவனித்துக்கொண்டு வரும் என்பதில் சந்தேகமில்லை.

* * *

வல்லரசுகளுக்குள் ஏற்பட்டுள்ள தகராறுகள் ஒரு புறமிருக்க, உலகிலுள்ள பெரிய நாடுகளும் சரி, சிறிய நாடுகளும் சரி, ஐக்கிய நாடுகள் சபையின் மூலம் உலகத்துக்கு நீதி கிடைத்து, உலகில் அமைதி ஏற்படும் என்றே இன்னும் நம்பி வருகின்றன.

அச்சபையில் முக்கிய ஸ்தானம் வகிக்கும் வல்லரசுகளுக்கு இந்தோனேஷ்யப் பிரச்னையைத் தீர்த்து, சுதந்திர அபிலாஷை கொண்டுள்ள அந்த நாட்டுக்கு நீதி வழங்குவது ஒரு பெரிய காரியமல்ல.

யுத்தத்தை உடனே நிறுத்தும்படி அமெரிக்காவும் பிரிட்டனும் டச்சு சர்க்காரை எச்சரிக்குமாயின், அவர்கள் கதறிக்கொண்டு போரை நிறுத்தி விடுவார்கள்.

ஆனால், மேற்படி வல்லரசுகளிடமிருந்து அவ்வளவு தூரம் எதுவும் எதிர்பார்ப்பதற்கில்லை. அதனால்தான் டச்சு சர்க்கார் பயமின்றி யுத்தத்தில் இறங்கியிருக்கிறார்கள்.

அது எப்படியாயினும், இப்போது ஐக்கிய நாடுகள் சபைக்கும், ஆசிய நாடுகளுக்கும் ஒரு பெரிய சோதனை ஏற்பட்டிருக்கிறது.

இந்தோனேஷ்யப் பிரச்னையைக் கூட ஐக்கிய நாடுகள் சபை கால தாமதமின்றியும் பாரபட்சமின்றியும் தீர்க்க முன் வராவிடில், முன்னர் சர்வதேச சங்கத்தைப் போன்று மேற்படி சபையின் விதியும் கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாக முடிந்து விடும் என்பது நிச்சயம்.

ஆசிய நாடுகள் அமைதியாகவும் சுபிட்சத்துடனும் விளங்க வேண்டுமாயின், இந்தோனேஷ்யா, இந்தோ-சீனா, மலாயா முதலிய பல நாடுகளிலும் அன்னியர் ஆதிக்கம் அறவே ஒழிய வேண்டும். இல்லாவிடில் சுதந்திரம் பெற்றுள்ள ஆசிய நாடுகளும் தீராத் தொல்லைகளுக்கு ஆளாகும்படி நேரும்.

பிறகு, வல்லரசுகளுக்குள் கட்சிகள் ஏற்பட்டு உலக அமைதியே நிரந்தரமாகச் சீர்குலைந்து விடலாம்.

எனவே, இந்தோனேஷ்யா முதலிய நாடுகளுக்கு நீதி கிடைக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டிய கடமை, ஆசிய நாடுகளையும் சார்ந்ததாகிறது.

# பாரதி மண்டப நிதி

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ ஏ. வைத்தியநாத அய்யர், எம். எல். ஏ. மதுரை | 251 | 0 | 0 |
| ஸர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார், கோயமுத்தூர் | 250 | 0 | 0 |
| ஸ்ரீ டி. கே. சித்திவிநாயக முதலியார், மடப்புரம், திருவாரூர் | 201 | 0 | 0 |
| ஸ்ரீ எம். பக்தவத்சலம், மராமத்து இலாகா மந்திரி, சென்னை | 101 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. கிருஷ்ணசாமி வாண்டையார், எம். எல். ஏ., பூண்டி | 101 | 0 | 0 |
| உம்மிடி ராமையா செட்டி & குருசாமி செட்டியார், சென்னை | 100 | 0 | 0 |
| சிலோன், கேகாலே, மரீனா மணி ஸ்டோர்ஸ் மூலம் வசூல் | 56 | 0 | 0 |
| ஸ்ரீ வே. கண. வெ. வெள்ளையப்ப செட்டியார், தலைவர், பஞ்சாயத்து போர்டு, நாட்டரசன்கோட்டை | 51 | 0 | 0 |
| ஸ்ரீ பாலகிருஷ்ணன் எம். எல். ஏ., பழனி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ எல். என். எஸ். மணி, திருநிதி பாங்க், திருச்சி | 50 | 0 | 0 |
| ஸ்ரீ பி. என். கிருஷ்ணமூர்த்தி, தென் இந்தியச் சங்கம், லாகூர் | 45 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. சுப்பராயன், கிராம முனசிப், பெண்ணாடம் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ எம். ஆர். சேதுராமன், புரொப்ரைட்டர், மதராஸ் ரெஸ்டாரண்டு, கும்பகோணம் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஜி. சேவ், பூனா | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. ஆர். முருகேசன், [illegible] | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பி. ராமமூர்த்தி, பாங்க் ஆப் ஹிந்துஸ்தான், திருச்சி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். சேதுபதி ராஜா, காவேரிப்பாக்கம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. கிருஷ்ணன், ரெவின்யூ இன்ஸ்பெக்டர், துறையூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. பாக்கியம் பிள்ளை, 'கல்கி' ஏஜெண்ட், பனக்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ என். ராஜகோபாலன், சங்கீத வித்வான், சென்னை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். என். கிருஷ்ணமூர்த்தி, "கல்கி" ஏஜெண்ட், பேரளம் | 5 | 0 | 0 |
| காரியதரிசி, பாரதி வாலிபர் சங்கம், நல்லூர் | 5 | 0 | 0 |

(எட்டயபுரம் பாரதி மன்றத் தலைவர் மூலம் வசூல் ரூ. 287-க்கு விவரம்:)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ செ. கணபதிப் பண்டாரம், ஷராப் வியாபாரம், கோவில்பட்டி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ எ.பி.எ.எ. நடராஜ நாடார், 'ரைஸ் மில்', கோவில்பட்டி | 26 | 0 | 0 |
| ஸ்ரீ சு. சுப்பிரமணியம் செட்டியார் அண்டு சன்ஸ், எண்ணெய் வியாபாரம், கோவில்பட்டி | 21 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. எஸ். பால் சின்னய்யா, பஞ்சு வியாபாரம், கோவில்பட்டி | 16 | 0 | 0 |
| ஸ்ரீ வி. வெங்கடசுப்பு செட்டியார், மளிகை, கோவில்பட்டி | 11 | 0 | 0 |
| ஸ்ரீ பா. வெள்ளைமுத்துத் தேவர், கண்ட்ராக்டர், எட்டயபுரம் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ லெட்சுமண ஆசாரி, சொர்ண வேலை, எட்டயபுரம் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ செல்லக்கனி நாடார், காய்கனி வியாபாரம், எட்டயபுரம் | 10 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஜனாப் நா. மி. உமர் சாஹிப், பொடிக்கடை, எட்டயபுரம் | 7 | 0 | 0 |
| ஸ்ரீ ஆதிமூலம் ஆசாரி, காசுக் கடை, எட்டயபுரம் | 7 | 0 | 0 |
| ஸ்ரீ மு. அ. சங்கரஞ்செட்டியார், நூல் வியாபாரம், எட்டயபுரம் | 7 | 0 | 0 |
| ஸ்ரீ கந்தசுவாமி செட்டியார், காசுக்கடை, கோவில் பட்டி | 6 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. எஸ். பேரைய்ய நாயகர், கிராம முனிசிப், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ ச. கு. சுப்பாசாரி, சொர்ண வேலை, எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். சுப்பையாபிள்ளை, காபி தோட்டம், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ சி. மரியப்ப நாடார், காய் கனி வியாபாரம், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ சித்திரைவேல் நாடார், காய் கனி வியாபாரம், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். தியாகராஜ மணிய காரர், ஷாப், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ சொக்கக்கண்ணுப் பிள்ளை, தலைவர், ராஜாஜி வாலிபர் சங்கம், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ கே. வி. வெங்கட்ட ராவ், காபி தோட்டம், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ ரா. குருசாமி பிள்ளை, காபி தோட்டம், எட்டயபுரம் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ பொ. பெரியசாமி நாடார் காய் கனி வியாபாரம், எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| சௌராஷ்டிரா டைமண்ட்ஸ், திருச்சிறுப்பள்ளி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சின்னத்திருவாளை மணிய காரர், டெய்லர், எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். திம்மு செட்டியார், ஆசிரியர், ராஜாப்பட்டி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வீ மு. கடலைமுத்து நாடார், கடலை வியாபாரம், எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ நாகராஜன் போத்தி, கோபதி விலாஸ் தோட்டம், எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ தெ. ஆ. வேலாயுத முதலியார், பஞ்சாயத்துப் போர்டு மெம்பர், எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ க. அ. பாப்பு ரெட்டியார், வியாபாரம், கசவன் குன்று | 5 | 0 | 0 |
| ஸ்ரீ மீ. ஆ. கந்தசுவாமி பிள்ளை பஞ்சாயத்துப் போர்டு மெம்பர், எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ மா. சுப்பா நாயுடு, வெள்ளையம்மாள்புரம் | 5 | 0 | 0 |
| ஆக ரூ. | 1615 | 0 | 0 |
| முன் ஜாபிதாவின்படி ரூ. | 3994 | 7 | 3 |
| ஆக மொத்தம் ரூ. | 5609 | 7 | 3 |

# புதிய தமிழ்நாடு

**1917**-ம் ஆண்டிலிருந்து 1923-ம் வருஷம் வரையில் தமிழ் நாடு முழுவதும், "டாக்டர் வரதராஜுலு நாயுடு" என்ற பெயரைக் கேட்டால், அழுத குழந்தைகள் எழுந்து உட்கார்ந்து, "எங்கே அந்த இங்கிலீஷ்காரன்? அவனை விரட்டியடிக்கப் போகிறேன்!" என்று சொல்லிக் கர்ஜித்து விட்டுத்தான் மறுபடியும் அழுகையைத் தொடங்கும்! அத்தகைய தேசிய சண்டமாருதப் பிரசாரம் செய்து தூங்கி வழிந்த தமிழ்நாட்டை சிலிர்த்து சிறக்கச் செய்தவர் டாக்டர் வரதராஜுலு நாயுடுகாரு. பேச்சுத் தொண்டோடு நில்லாமல் எழுத்து மூலமாகவும் தொண்டு செய்வதற்குப் "பிரபஞ்ச மித்திரன்" என்ற பத்திரிகையை ஆரம்பித்துப் பின்னர் அதற்குத் "தமிழ்நாடு" என்று புது நாமகரணம் செய்தார். சில காலம் "தமிழ்நாடு" வாரப் பத்திரிகையும் தினப் பத்திரிகையும் மிக்க பிரபலம் அடைந்து தமிழ் மக்களுக்குச் சிறந்த தொண்டு செய்து வந்தன.

பற்பல காரணங்களினால் "தமிழ்நாடு" பத்திரிகை இடையில் வெகு காலம் நின்று போயிருந்தது. இப்போது அவ்வளவுக் கவ்வளவு அதி தீவிர வேகத்துடன் புதிய "தமிழ்நாடு" வாரப் பத்திரிகையாக மதுரையிலிருந்து வெளியாகத் தொடங்கியிருக்கிறது. ஜூலை மாதம் 4-ம் தேதி இதழ், சில கால மாக அரசியலிலிருந்து ஒதுங்கி அஞ்ஞாத வாசம் செய்துவரும் பசும்பொன் ஸ்ரீ முத்து ராமலிங்கத் தேவரின் உருவப் படத்தை மேலட்டையில் தாங்கி விளங்குகிறது.

பத்திரிகையில் காணப்படும் அரசியல் குறிப்புகள், கட்டுரைகள் எல்லாம் எரிமலை நெருப்பைக் கக்குவதுபோன்ற வீராவேசத் தமிழ் நடையில் அமைந்திருக்கின்றன. ஸோஷலிஸ்ட் கட்சியின் கொள்கைகளைப் பெரிதும் ஆதரித்துக் கட்டுரைகள் துலங்குகின்றன. புதிய "தமிழ்நாடு" பத்திரிகையின் ஆசிரியர் யார் என்று பார்த்தோமானால், நடையின் வேகத்தைப் பற்றி அதிசயப்பட மாட்டோம். இதாலி தேசத்தில் பேனா முனையினால் பெரும் புரட்சி உண்டு பண்ணிய "மாஜினி"யின் பெயரைத் தமது புனைபெயராக வைத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீ ஆர். ரங்கசாமி ஆசிரியராயிருக்கும் போது, பத்திரிகையின் நடையும் கொள்கைகளும் ஒரே தீவிரமாயிருப்பதற்குக் கேட்பானேன்? தமிழ் டாக்கிப் படங்களை அக்கு வேறு ஆணி வேறாகப் பிய்த்து வாங்கி விமரிசனங்கள் எழுதி வந்த "மரூஜி"யின் பிரஞ்சுப் புரட்சிக் கட்டுரை சென்ற வாரத் "தமிழ்நாடு" இதழுக்கு மேலும் மிடுக்கைத்தை அளிக்கிறது. புதிய "தமிழ்நாடு" நீடூழி வாழ்ந்து தமிழ் மக்களுக்குச் சிறந்த முறையில் தொண்டாற்றுமென்று நம்புகிறோம்.

பஞ்சாப் தலைமைப் பதவிக்கு பிரமாத போட்டி நடந்து வருகிறது. நூன் - மம்தாஜ் சண்டையை நிறுத்தி மம்தாஜைச் சமாதானம் செய்ய காயிதே ஆஸம் சிந்து கவர்னர் பதவியை அவருக்குக் கொடுக்கத் தயாராயிருப்பதாக வதந்தி.

"இந்தியா சுதந்திரம் பெற பிரிட்டனே உதவி புரியும்போது, அதற்கு ஓர் இந்தியர் முட்டுக்கட்டை போடுவது ஆச்சரியத்திலும் ஆச்சரியமல்லவா?'' என்று மவுண்ட் பாட்டன் டில்லி சென்றிருந்த ஸர். சி.பி.க்கு இடித்துக் காட்டியிருக்கலாம்.

மயிலாப்பூர் கபாலீஸ்வரர் ஆலய கோபுர புனருத்தாரண நிதிக்காக





# ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

## உதவும் சங்கீதக் கச்சேரி

**ஆஸ்தான வித்வான்**

சங்கீதரத்ன மைசூர் டி. சௌடய்யா — பிடில்
கல்பாத்தி ராமநாதன் — மிருதங்கம்
ஆலங்குடி ராமச்சந்திரன் — கடம்



ஞாயிறு 3—8—1947 மாலை 5-30 மணிக்கு

## மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூலில்



சென்னை பிரதம மந்திரி **ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள்**
தலைமை வகிப்பார்கள்

டிக்கட்டுகள் : ரூ. 50/: 10/: 5/: 3/:



கீழ்க்கண்ட இடங்களில் டிக்கெட்டுகள் கிடைக்கும் :

1. திருப்பணி ஆபீஸ், கபாலீஸ்வரர் ஆலயம், மயிலாப்பூர்
2. கற்பகவல்லி டாக்ஸி சர்வீஸ், 1, பிராடீஸ் ரோடு, மயிலாப்பூர்
3. டூரிஸ்ட்ஸ் ஹோம், ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில், எழும்பூர்
4. பாரத் கபே, மவுண்ட் ரோடு
5. ராமகிருஷ்ண லஞ்ச் ஹோம், எஸ்பிளனேட்
6. ஸாம்ஸன் அண்டு கம்பெனி, பிராட்வே
7. தி யூனைடெட் என்ஜினீரிங் கம்பெனி, பாண்டி பஜார், தி. நகர்

ஏ. பார்த்தசாரதி முதலியார், சுவாமிநாத குருக்கள் : நிர்வாகிகள்.

ஒலி பெருக்கி : திருச்சி ரேடியோ ஸேல்ஸ் & ஸர்விஸ்.



சென்ற ஜூலை மாதம் 21-ந் தேதி மாயவரத்தில் நடந்த ஹரிஜன ஆலயப் பிரவேச கொண்டாட்டத்தில், சென்னை சட்டசபைத் தலைவர் ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை, தஞ்சை ஜில்லா ஹரிஜன

சேவா சங்கத் தலைவர் சர்தார் வேதரத்தினம் பிள்ளை எம்.எல்.ஏ., சுவாமி சகஜானந்தம் முதலியவர்கள் பிரசன்னமாயிருந்தார்கள். அவர்களை மயூரநாத ஆலய சூப்ரண்டன்ட் ஸ்ரீ ஆர். கே. சுப்பிரமணியப் பிள்ளையும், மாயவரம் ஹரிஜன சேவா சங்க ஊழியர்களும் உத்ஸாகமாக வரவேற்று ஆலயப் பிரவேசத்தைச் சிறப்பாக நடத்தினார்கள்.






ஜானு எனக்கு ஆப்த சிநேகிதையாகி விட்டாள். அவளிடம் வெளியிடாமல் எதையும் என்னால் மனத்தில் வைத்துக் கொண்டிருக்க முடியாது. அதற்கு நேர்மாறாயிருந்தாள் ஜானு. வற்புறுத்திக் கேட்டாலொழிய அவளிடமிருந்து எதுவும் வெளி வராது. எனக்கோ அவள் விஷயங்கள் முழுவதையும் அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் அதிகரித்தது.

அன்று ஜானுவும் அவள் கணவரும் மாடியில் பேசிக்கொண்டிருந்தார்கள்.

"சரிதான், நான் போவதற்கு முன்பே ஆரம்பித்து விட்டாயே, ஜானு! இப்போது நீ என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார் அவள் கணவர்.

"இந்த அறையை ஒழுங்கு படுத்தப் போகிறேன்" என்றாள் ஜானு.

"வேண்டாம், வேண்டாம்! நான் வருமட்டும் நீ எந்த வேலையும் செய்யக் கூடாது. பேசாமல் வந்து உட்கார்!"

"மூன்று நாள் ஜுரத்திற்காக மூன்று மாதங்கள் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டுமாக்கும்! நல்ல தண்டனை, இது!"

"ஒன்று செய், ஜானு! உன் அருமை மாமியிடம் போய் இரண்டு மாதங்கள் இருந்து விட்டு வா. தண்டனையில்லாமல் சுகமாக இருக்கும்!" என்று சொல்லிக் கொண்டே அவர் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தார்.

அவர் வெளியே போன மறுகணமே நான் ஜானுவின் பக்கத்தில் போய் நின்றேன்.

"என் அம்மா, இவ்வளவு துக்கம்? உன்னால் இந்தச் சொல்லைக்கூடப் பொறுத்துக்கொள்ள முடியவில்லையா?" என்றேன்.

"இல்லை, சரசு! மாமியைப் பற்றிச் சொன்னால் எனக்கு எவ்வளவோ விஷயங்கள் நினைவுக்கு வருகின்றன" என்று அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"ரொம்ப நல்லதாயிற்று, இப்பொழுதே அவற்றையெல்லாம் என்னிடம் சொல்லி விடு. மனது சரியாகிவிடும்!" என்று நான் அங்கிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டேன்.

"உன்னிடம் சொல்ல வேண்டுமென்று தானிருக்கிறது. ஆனால் எனக்கு வாய்விட்டுச் சொல்வதற்கே வாயில்லையம்மா!"

"அப்படியானால் ஒரு யுக்தி சொல்கிறேன் கேள். பேசாமல் காகிதத்தில் எழுதிக் கொடுத்து விடு. அதுதான் எனக்கு ரொம்பப் பிடிக்கும்."

"அதுவும்தான் எனக்கு அவ்வளவு கோவையாக வராதே!"

"எப்படியிருந்தாலும் இன்று உன்னை விடப் போவதில்லை!" என்று சொல்லி ஒரு வழியாக நான் அவளை எழுதச் சம்மதிக்கும்படி செய்து விட்டேன்.

அவள் எழுதிக் கொண்டிருக்கும்போதே நான் படிக்கவும் ஆரம்பித்து விட்டேன்.

• • •

என் அப்பா எனக்கு நினைவு தெரிவதற்கு முன்பே இறந்து விட்டார். என் அம்மா இறந்தது மட்டும் எனக்கு நன்றாக்

நினைவிருக்கிறது. என்னுடன் என் மாமா வீட்டில் அடைக்கலம் புகுந்த என் தாயார் என்னை மாமியிடம் ஒப்படைத்து விட்டுப் போய் விட்டாள். மாமா உத்தியோக நிமித்தம் அடிக்கடி வெளியூர் போய்விடுவார். மாமி தான் வீட்டின் சர்வாதிகாரி. நான் துரதிர்ஷ்டக்காரி என்ற காரணத்தால் மாமிக்கு என் மேல் ஆரம்பத்திலிருந்தே வெறுப்புத்தான். நான் அவர்கள் வீட்டில் காலடி வைத்த தோஷத்தினால்தான் தன்னுடைய கடைசிக் குழந்தையும் பெண்ணாகப் பிறந்து விட்டதென்று கூட அவள் சொல்லுவாள்!

அம்மா எனக்கு வைத்திருந்த பெயர் ஜானகி. மாமியோ, 'தேசீ! தக்கிரி!' என்னும் அருமைப் பெயர்களினால்தான் என்னை அழைப்பாள்!

ஏதோ கொஞ்சம் கருணை கொண்டு பத்து வயது வரை அவள் பெண் ராஜியோடு சேர்ந்து பள்ளியில் போய்ப் படித்து வர என்னையும் அனுமதித்திருந்தாள் மாமி. பின்பு அனாதையாகிய நான் எந்த விஷயத்திலும் தன் பெண்களுக்குச் சமதையாயிருப்பதில் அவளுக்கு இஷ்டமில்லை. வெட்டிக்குச் சாப்பிட்டுக் கொழுத்துப் போகாமலிருப்பதற்காக வீட்டு வேலைகளில் பெரும் பாகம் என்னைச் சேரும். அதில் அற்பத் தவறு நேர்ந்தாலும் கிடைக்கும் தண்டனை அபாரம். அந்த வீட்டில் லலிதாவைத்தான் கொஞ்சம் சேர்த்துக் கொள்ளலாம். மாமிக்கு என்மேலுள்ள வெறுப்பை அதிகமாக்குவதில் ராஜிக்குப் பரம திருப்தி. இவைகள் போதாதென்று பகவான் என் பொறுமையைச் சோதிக்க இன்னொரு ஆத்மாவையும் அனுப்பியிருந்தார்! அவர்தான் மாமியின் அக்கா பிள்ளையான லக்ஷப் பிரபு!

ராஜியைவிடப் பெரியவரான அந்த லக்ஷப் பிரபுவை மாமி சிறு குழந்தையென்றுதான் சொல்லிக் கொள்வாள். ஒவ்வொரு வருஷ விடுமுறைக்கும் அந்தப் பிள்ளையை அழைத்துச் சீராட்டுவாள். பிரபு என்ன குறும்புத்தனம் செய்தாலும் மாமிக்கு எதிரில் அந்தப் பிள்ளையை யாரேனும் ஒரு வார்த்தை சொல்லிவிட முடியாது. 'குபேர சம்பத்தில் பிறந்தும் கொடுமைக்கு ஆளாகி விட்டுப் போய்விட்டாளே, பாவி!' என்று தன் அக்காவை நினைத்துக் கொண்டு பெரிதாக அழ ஆரம்பித்து விடுவாள்.

ஒரு நாள் அந்த அதிசயப் பிள்ளையை நான் பெயர் சொல்லி அழைத்து விட்டேன். அப்பப்பா! அன்று மாமி என்மேல் கொடுத்த வசை பாணங்களை இப்பொழுது நினைக்கக்கூட மனம் கூசுகிறது. அந்த வயதில் எனக்குப் புரியாத வார்த்தைகள் எவ்வளவோ இருந்தன. ஆனாலும் "அடி தக்கிரி! அவனை யாரென்று நினைத்து மரியாதையில்லாமல் பேசுகிறாய்? அவன் லக்ஷப் பிரபுடா, லக்ஷப் பிரபு! அவன் வீட்டு விளக்குமாற்றின் பெருமைகூட உனக்கு வராது! இனி அவனைப் பெயர் சொல்லி அழைத்தால் நாக்கில் சூடு போட்டு விடுவேன்!" என்று அன்று அவள் ஏசியது எனக்குப் புரியாமற் போகவில்லை.



இந்த வார்த்தைகள் என் மனதில் ஆழப் பதிந்துவிட்டன. அன்று முதல்



அந்தப் பெயரை மனத்தால் நினைப்பதற்குக் கூட எனக்குப் பயந்தான்!

ராஜீயின் தூண்டுதலினால் பிரபு என்னைப் படுத்தி வைத்த பாடு கொஞ்சநஞ்ச மல்ல. நான் செய்யாத தவறையெல்லாம் செய்ததாக அருமை அண்ணாவும் தங்கையும் என் மீது மாமியிடம் கோள் சொல்லிக் கொம்மாளம் அடிப்பார்கள். அந்தத் தாயில்லாப் பிள்ளைக்கு ராஜோபசாரம் நடக்கும். அதே வீட்டில், இந்த அனாதைப் பெண்ணுக்கு அடியும் உதையும்தான் கிடைக்கும்!

வயது ஆக ஆக என்னுடைய நிலைமை எனக்கு விளங்கிற்று. மாமிக்கு எதனால் என் மேல் இவ்வளவு துவேஷம் என்று எண்ணும் பொழுதெல்லாம் எனக்கு அழுகையும் ஆத்திரமும் பொத்துக் கொண்டு வந்தது.

## 2

அந்த வருஷம் பிரபு வந்தது முதல் எனக்குப் போதாத காலமென்று தான் சொல்ல வேண்டும். எல்லாவற்றிலும் அந்தச் சம்பவத்தை மட்டும் என்னால் மறக்க முடியவில்லை.

அன்று வருஷப் பிறப்பு. மாமா ஊரில் இல்லை. அதிகாரத்துடன் என்னை வாட்டி வருத்திப் பிரபுவுக்குப் பெரிய விருந்து செய்து உபசரித்தாள் மாமி.

அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்த பொழுது மாமி பொரித்துக் கொடுத்த அப்பளத்தைப் பரிமாற வந்தேன். நான் பிரபுவின் பக்கம் வந்த பொழுது அவர் என் கையை ஒரு தட்டுத் தட்டி விட்டார். அப்பளங்கள் அவ்வளவும் நழுவி அந்த இலையில் விழுந்து விட்டன. அவ்வளவு தான்; நான் ஆத்திரத்தினால் அப்படிச் செய்தேனென்று ராஜீ சொல்லியதை நம்பிய மாமிக்குக் கோபம் உச்ச நிலையை அடைந்து விட்டது. என் தலை மயிரைப் பிடித்து இழுத்து ஒரே தள்ளாகச் சமையலறைக்குள் தள்ளினாள். நான் விழுந்த வேகத்தில் அப்பொழுது தான் இறக்கி வைத்திருந்த பொங்கும் எண்ணெய் என் புறங்கையில் சாய்ந்து விட்டது. பகவானே! அப்பளம் இலையில் விழுந்த தோஷத்திற்காக எவ்வளவு பெரிய தண்டனை! எரிச்சல் தாங்காது தவித்தேன். அன்று என் கதறல் கல் மனமுடைய பிரபுவைக்கூடக் கொஞ்சம் இரங்கும்படி செய்தது.

“என் சின்னம்மா, நீ இவளை வைத்துக் கொண்டு கஷ்டப்படுகிறாய்?” என்றார்

பிரபு. பாவம், அன்றுதான் சாவதானமாக அவர் என் பூர்வோத்திரத்தையும் விசாரித்தார்.

அதற்குப் பிறகு மூன்று வருஷங்கள் வரை பிரபு சின்னம்மா வீட்டுக்கு விஜயம் செய்யவில்லை. மேல் படிப்புக்காக வெளியூர் போயிருப்பதால் விடுமுறைக்குக்கூட அவனால் வர முடியவில்லை என்று மாமி குறைப்பட்டுக் கொள்வாள். அப்பொழுதெல்லாம் அது பகவான் என்னிடம் காட்டிய கருணை என்று நான் எண்ணிக் கொள்வேன்.

அன்று வெகு அவசரமாய், "அம்மா, அம்மா!" என்று அழைத்தபடி ஒரு கடிதத்துடன் ஓடி வந்தாள் ராஜி. 'என்ன?' என்று பார்த்தேன். "நாளை அண்ணா வருவதாய் எழுதியிருக்கிறா"னென்று சந்தோஷப்பட்டாள் அவள். எனக்குத் திக்கென்றது.

மறு நாள் வீடு குதூகலமாயிருந்தது. வந்த பிள்ளை சும்மா வராமல் ராஜிக்கு ஒரு வரனையும் நிச்சயம் செய்து கொண்டு வந்திருந்தார். மாமியின் சந்தோஷத்திற்குக் கேட்கவா வேண்டும்? அன்று என்னிடம்கூடச் சற்றுப் பிரியம் காட்டினாள்! ராஜிக்கோ நிலை கொள்ளவில்லை.

"அட, ஜானு! அண்ணாவைப் பார்த்தாயோ, இப்பொழுது எவ்வளவு வளர்ந்திருக்கிறான், தெரியுமோ!" என்று என் தோளைப் பிடித்து உலுக்கினாள் ராஜி. முன்பே பிரபுவாயிருந்தவர் இப்பொழுது பெரியவராகி விட்டார். இன்னும் எப்படியெல்லாம் உபசாரம் நடக்குமோ என எண்ணிக் கொண்டேன்.

## 3

அன்றுதான் ராஜியைப் பார்க்க அவர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் முன் மாமி என்னை அவமானப்படுத்தாமல் இருக்க வேண்டுமே என்று நான் எவ்வளவு கவலைப்பட்டேன் தெரியுமா? கூடிய மட்டும் ஜாக்கிரதையுடன் நடந்து கொள்ள வேண்டுமென்று நினைத்திருந்தேன். ஆனாலும் என் துரதிர்ஷ்டம் என்னை விட்டு எங்கே போகும்? மாமியின் உத்தரவுப்படி விசிறியை எடுத்துக் கொண்டு வர மாடி யறைக்குப் போனேன். எப்படியோ இந்தப் பாழும் கை மேஜை மீதிருந்த கண்ணாடி டம்ளரில் பட்டு அது உருண்டு விழுந்து விட்டது. அறை முழுவதும் சிதறிக் கிடந்த கண்ணாடித் துண்டுகளைப் பார்த்ததும் என் மனம் திகில் அடைந்து விட்டது. யாரேனும் வருவதற்குள் எடுத்துவிட வேண்டுமென்று வேகமாக அவைகளைக் கையினால் திரட்ட ஆரம்பித்தேன். கண்ணாடித் துண்டுகள் கையில் பல இடங்களில் குத்திக் கிழித்து விட்டன. வலி பொறுக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்த சமயம் காலடி ஓசை கேட்டுத் திரும்பினேன். அந்தச் சமயத்தில் அங்கு வந்து நின்ற பிரபுவைக் கண்டதும் என் மனம் எப்படி இருந்திருக்கும்?

"சின்னம்மா, சீக்கிரம் வா!" என்று இரைந்தார் பிரபு. உடனே மாடிப் படியில் காலடிச் சத்தம் கேட்டது. இனி கிடைக்கப் போகும் தண்டனையை நினைத்துக் கண்களை இறுக மூடிக் கொண்டேன்.

"இதென்னடா, அலங்கோலம்!" என்றாள் மாமி.

'ஒன்றுமில்லை; சற்று முன் நான் இங்கே வந்து மேஜை மீதிருந்த புத்தகத்தை எடுத்தபொழுது இந்தக் கண்ணாடி டம்ளர் தவறி விழுந்து விட்டது. இவள் வந்து அந்தக் கண்ணாடித் துண்டுகளைக் கையால் திரட்டி எடுத்திருக்கிறாள். அது கையெல்லாம் பொத்துக் கொண்டிருக்கிறது. லலிதாவைச் சீக்கிரம் போய்க் கொஞ்சம் ஜலமும் துணியும் கொண்டு வரச் சொல்லேன்!" என்றார் பிரபு.

என் காதுகளை என்னால் நம்ப முடியவில்லை. வெகு அக்கறையுடன் என் கையில் குத்தியிருந்த கண்ணாடித் துண்டுகளையெல்லாம் மெதுவாக எடுத்துக் காயத்தைக் கட்டிவிட்டு, "என்ன சின்னம்மா, இவள் கையில் இவ்வளவு பெரிய தழும்பு?" என்று கேட்டார் பிரபு.

"வருஷப் பிறப்பன்று கொதிக்கும் எண்ணெயைக் கொட்டிக் கொண்டு என் பிராணனை வாங்கித்தே, அதுதான்!" என்று அந்தச் சம்பவத்தை ஞாபகப் படுத்தினாள் மாமி. 'எல்லாம் உன் வெகுமதிதான்!' என்று நான் மனதிற்குள் சொல்லிக் கொண்டேன்.

எப்படியோ அன்று ஒரு பெரிய கண்டத்திலிருந்து தப்பிவிட்டேன். இம்முறை பிரபு நடந்து கொண்ட விதம் எனக்கு ஆச்சரியமாயிருந்தது.

பிரபு ஊருக்குப் போவதற்கு முதல் நாள் மாமியுடன் ராஜியின் விவாக விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தார்.

"காசு பணத்தைப் பற்றிய கவலை உனக்கு வேண்டாம். தை மாதமே விவாகத்தை முடித்துவிட ஏற்பாடு செய், சின்னம்மா!" என்று பிள்ளை சொல்லியதைக் கேட்ட மாமிக்கு உச்சி குளிர்ந்து

விட்டது. "என்ன இருந்தாலும் ராஜி அதிர்ஷ்டசாலிதான்!" என்று தன் பெண்ணைப் பற்றிச் சிலாகித்துக் கொண்டான். அந்தச் சமயத்தில் காப்பியுடன் அங்கு போன என்னைக் கண்டதும் மாமிக்குக் காரணமில்லாமல் என்மேல் கோபம் வந்தது. "இந்தத் தோஷியையும் அதே முகூர்த்தத்தில் தொலைத்துவிட வேண்டும். அப்புறம்தான் இந்த வீடு விளங்கும்!" என்று தன் பேச்சை மங்களகரமாய் முடித்தாள்!

உடனே பிரபு, "மாப்பிள்ளை பார்த்து விட்டாயா?" என்று கேட்டார்.

"என்ன, அண்ணா புதிதாய்க் கேட்கிறாயே! வெகு நாட்களுக்கு முன்பே அவளைச் சப்பண்ணாவுக் கென்று நிர்மானித்தாகி விட்டதே!" என்றாள் ராஜி.

"யாருக்கு? அந்தச் செவிட்டுச் சப்புணுக்கா!' என்று பின்னை முடிப்பதற்குள் 'அவனுக்கென்னடா, ராஜாவாட்டமிருக்கான்!" என்று மாமி சப்பண்ணாவின் பிரதாபத்தை எடுத்து ஓத ஆரம்பித்து விட்டாள்.

4

சப்பண்ணாவின் தாயார், என் மாமிக்கு ஏதோ ஒரு முறையில் சகோதரியாக வேண்டுமாம். உள்ளூரிலிருந்த அவர்கள் அடிக்கடி மாமியிடம் வந்து குலாவுவார்கள்.

"ஜானு! சப்பண்ணாவின் அழகை உனக்கெப்படி வர்ணிப்பேன்! செக்கச் சிவக்க ராஜாவாட்டம்......!" என்று மாமி அடிக்கடி என்னிடம் ஆரம்பிப்பாள். காது மந்தமான அவன் முகத்திலும் அசடு வழியும். பூதாகாரமான தேகத்தைத் தூக்கிக் கொண்டு அவன் நடப்பதைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கும். இவ்வளவு லக்ஷணத்தில் கல்வியறிவும் கிடையாது. எப்பொழுதும் அம்மாவுடனேயே சுற்றிக் கொண்டிருப்பான். அந்த ராஜாவுக்கு என்னைக் கொடுக்க மாமாவுக்கு முதலில் இஷ்டமில்லை. மாமியா விடுகிறவள்? எப்படியோ தந்திரமாய் வாதாடித் தன் பிடிவாதத்தை நிலை நிறுத்திக்கொண்டு விட்டுவிட்டாள். என் மனக் குறையை நான் யாரிடம் முறையிட்டுக் கொள்ள முடியும்?

விவாகத்திற்கு ஒரு மாதத்திற்கு முன்னிருந்தே வீடு தடபுடல் பட்டது. அன்று பகல் ராஜியும் லலிதாவும் சேர்ந்துகொண்டு என் மனப் புண்ணை அதிகமாக்கி விட்டார்

கள். இரவு எல்லாம் முடிந்த பின் வெளி மாடியில் போய் உட்கார்ந்தேன்.

அந்த வீட்டில் என் துக்கத்தை நினைத்துக்கொண்டு அழுவதற்கு அந்த ஒரு இடம் தான் வசதியாயிருந்தது. என்னுடைய நிலைமையை நினைத்தபொழுது என்னை இந்தக் கதிக்கு ஆளாக்கிவிட்டுப் போன அம்மாவின் மேல்தான் எனக்குக் கோபம் கோபமாக வந்தது. "சுப்பண்ணுவுக்கு வாழ்க்கைப் படுவதற்குள் என்னை வந்து கொண்டு போய்விடு, அம்மா!" என்று விக்கி விக்கி அழுதேன்.

மறுநாள் காலை என்னால் எழுந்திருக்கவே முடியவில்லை. மாமியின் முணுமுணுப்பைக் கூட லக்ஷ்யம் செய்யாது படுத்திருந்தேன்.

லலிதா வந்து என் நெற்றியைத் தொட்டுப் பார்த்துவிட்டு, "ஐயோ, கொதிக்கிறதே!" என்ற பின்புதான் எனக்குக் கடுமையாக ஜுரம் வந்திருப்பது தெரிந்தது. அப்பொழுது நான் அடைந்த சந்தோஷம் சொல்லி முடியாது. நேற்று அம்மாவைப் பிரார்த்தித்தது வீண் போகவில்லை; என்னைக் கொண்டு போகத்தான் அந்த ஜுரம் வந்திருக்கிறதென்று எண்ணிக் கொண்டேன்.

நான் படுக்கையில் விழுந்த இரண்டு நாட்களுக்குப் பின் நடந்தவைகளொன்றும் எனக்குத் தெரியாது. நான் சுய நினைவு அடைந்தபொழுது எனக்கு ஆச்சரியகரமான உபசாரம் நடந்து கொண்டிருப்பதையறிந்தேன். கட்டிலும் மெத்தையும், கணத்திற்கு ஒரு முறை கவனித்து உபசரிக்கும் பணிப் பெண்ணும்—ஆஹா! இதெல்லாம் கனவா, நனவா என்று எனக்கு வெகு நேரம் புரியவில்லை. அறைக்கு வெளியே நின்றுகொண்டு என்னை வெறுத்துப் பார்த்துவிட்டுப் போன மாமியைக் கண்ட பின்புதான் கொஞ்சம் தெளிவு உண்டாயிற்று. எந்தவிதமான பேச்சோ அரவமோ எனக்குக் கேட்கவில்லை. மறு நாள் வைத்தியர் வந்து பார்த்துவிட்டு என் காது சற்று மந்தமடைந்திருப்பதாயும், அதிகமாய் அலட்டிக் கொள்ளாதிருந்தால் அதி சீக்கிரம் குணமாகிவிடும் என்றும் சொல்லி விட்டுப் போனார். மாமி, ராஜி முதலியோர் என் அருகில்கூட வருவதில்லை. எனக்கு உடம்பு தெளிந்து கொஞ்சம் நடமாட முடிந்த பின்பும் அந்தப் பணிப் பெண் என்னை அந்த அறையை விட்டு நகர அனுமதிக்கவில்லை. இவ்வளவு கட்டுப்பாடு எதற்கென்று எனக்கும் புரியவில்லை.

5

விவாகத்திற்கு முதல் நாள் வீடு அமளி துமளிப் பட்டது. நான் மட்டும் கைதியைப் போல் அந்த அறையில் தனித்திருந்தேன். மறு நாள் நடக்கப் போகும் சம்பவத்தை நான் கொஞ்சமும் அறியவில்லையென்பதை எவரும் எளிதில் நம்ப மாட்டார்கள். கடைசியில் லலிதாவின் வார்த்தைகளினால்தான் கொஞ்சம் யூகித்துக் கொண்டேன்.

"நாளைக்குத் தாலி கட்டிக் கொள்ளப் போகும் பெண் இப்படித்தான் சோர்ந்திருப்பதோ!" என்று என் காதருகில் வந்து கேட்டுவிட்டு ஓடினாள் லலிதா.

'இப்பொழுது நாம் செவிட்டுச் சுப்பண்ணுவுக்குத் தகுந்த ஜோடிதானே!" என்று எண்ணி நான் மனதைத் தேற்றிக் கொள்ள முயன்றேன்.

மறுநாள் விடியற்காலையிலேயே என்னை எழுப்பி ராஜிக்குச் சமதையாக எனக்கும் சிங்காரித்தார்கள். உண்மையைச் சொல்லப் போனால் அப்பொழுதுகூட வீடு இருந்த குழப்பத்தில் எனக்கு எதுவுமே விளங்கவில்லை.

எப்படியோ எல்லோருமாகச் சேர்ந்து அந்த வேளை நெருங்கி விட்டதென்று என்னைத் துரிதப்படுத்தினார்கள். நானும் அங்கு போய் நின்றுவிட்டேன். கண்களை நீர் மறைத்தது. சோர்ந்த மனத்துடன் சற்று நிமிர்ந்தேன். என்ன அதிசயம்! அப்பொழுது என் கண்களை என்னால் நம்பவே முடியவில்லை. எதிரில் மாப்பிள்ளைக் கோலத்தில் நின்று கொண்டிருந்தவரைக் கண்டு என் இருதயம் கூடச் சற்று நேரம் நின்று விட்டதுபோல் தோன்றியது.

கனவில்கூட எதிர்பார்க்க முடியாத கதைப் பிரபு என் மாலைக்காகத் தன் தலையைத் தாழ்த்தினார்!

நானும் சந்தோஷத்துடன் அவருக்கு மாலையிட்டேன். கிரகப் பிரவேசம் முடிந்து, மாமி முதலியவர்கள் ஊருக்குப் போக ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். இந்த நான்கு நாட்களும் நான் ஒன்றும் புரியாமல் மாமியுடனேயே சுற்றிக் கொண்டிருந்தேன்.

அன்று ராஜி என்னிடம் வந்து, "அண்ணாவின் கைக்கடிகாரத்தை உன்னிடம்

கொடுத்தேனே, எங்கே?" என்று கேட்டான்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவன் அதை என்னிடம் கொடுக்கவே இல்லை. நான் அதைப் பார்த்தது கூட இல்லை. அவனோ என்னிடம் தான் கொடுத்தேனென்று ஒரேயடியாகச் சாதித்தான். அன்று கடைசியாக மாமியின் ஆசீர்வாதம் பாக்கியிருந்தது போலும்!

"இந்த அவலத்தைத் தவிர வேறு நுபகதிகள் இந்த உலகத்திலேயே கிடையாது என்று 'ஒரே பிடியாய்ப் பிடித்துக் கட்டிக் காத்துக் கலியாணம் செய்து கொண்டானே! அந்தச் சமர்த்துப் பிள்ளையிடம் போய்ச் சொல்லு!" என்று அடிக்கிறாள் மாமி.

அவரிடம் அது சென்று வந்த ராஜி, "அண்ணா உன்னை வரச் சொல்கிறார்!" என்றாள். பதைக்கும் மனத்துடன் நான் அவருடைய அறைக்குப் போனேன். அந்தப் படிகாரத்தைப் பற்றிய பேச்சையே அவர் எடுக்கவில்லை. "இதோ பார், ஜானு! இனிமேல் நீ யாருக்கும் அடிமை யில்லை. அப்பாவின் தயவைக் கொண்டு நான் உன்னைச் சிறைமீட்டு விட்டேன்!" என்று ஆதரவோடு அவர் என் கையைப் பற்றி, "முன்பு உன் அருமை தெரியாது நான் உனக்கு எவ்வளவோ தீங்கிழைத்திருக்கிறேன். மன்னிக்க முடியாத இந்தக் குற்றவாளியை நீ என்ன செய்யப் போகிறாய், சொல்!" என்று தழுதழுத்த குரலில் அவர் கேட்ட பொழுது என் தேகம் சிலிர்த்தது. பொங்கி வரும் உணர்ச்சியைத் தாங்மாட்டாது கண்கள் நீரைச் சொரிந்தன. அப்பொழுது என் மனமிருந்த நிலையை இதற்குமேல் எனக்கு வர்ணிக்கத் தெரியவில்லை......"

• • •

ஜானு எழுதிக் கொடுத்ததை முழுவதும் படித்துவிட்டு நான் அவளைக் குவிப்படுத்த வேண்டுமென்று நினைத்திருந்தேன் அதற்குள் பிரபு வந்து விடவே, ஜானு எழுந்து போய்விட்டாள். "அடியம்மா, மோட்டி! கடைசியில் ரஸமான கட்டத்தில் என்னை ஏமாற்றி விட்டாயே!" என்று சொல்லிக் கொண்டே நானும் அந்த இடத்தை விட்டு நகர்ந்தேன்.



கோபாலி:—என்னடா, இது! கண்ணுக்கு என்னவெல்லாமோ தோன்றுகிறது! யமகிங்கரன்னு வந்திருக்கான், டாக்டர் எங்கேடா?

மகன்:—அவர் டாக்டர்தான் அப்பா, பயப்படாதே! டிராமாவிலே அவர் வேஷம் போட்டு நடித்துக் கொண்டிருந்தார். 'உடனே வரணும்' என்று அவசரமாகக் கூப்பிட்டேன், விழுந்தடித்துக் கொண்டு வேஷத்தோடேயே வந்து விட்டார்!

# வட்ட மேஜை

பிரம்பை,
22—7—47.

''கல்கி'' ஆசிரியர் அவர்களுக்கு,

20—7—47 கல்கி இதழில் வட்ட மேஜை என்னும் தலைப்பின் கீழ் பிரசுரிக்கப்பட்ட சுதந்திரப் பிரியன் ரங்கநாதன் அவர்கள் எழுதிய கடிதத்தைப் படித்தேன். அவர் எழுதிய அக் கடிதத்தில் மூன்று விஷயங்கள் கவனிக்கத் தக்கவை.

1. ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி இந்தியாவில் பிரிட்டிஷார் ஆட்சி இந்தியர் கைக்கு மாறிவிடுவதால் ஞாயிற்றுக்கிழமை விடுமுறை நாளை மாற்றி இந்துக்களின் புண்ணிய தினமான வெள்ளிக்கிழமையை விடுமுறை நாளாக்க வேண்டுமென்றும்,

2. அம்மாதிரி செய்வதால் மைனாரிடிகளாகிய முஸ்லிம்களுக்கும், வெள்ளிக்கிழமையன்று அவர்கள் பிரார்த்தனை செய்வதற்கு விடுமுறை கொடுத்துப் பெருமை அடைகிறோமென்றும்,

3. ஞாயிற்றுக்கிழமைகளில் சினிமா, நாடகம் முதலியவைகளைப் பார்க்கத்தான் தோன்றுகிறது என்றும் கூறியிருக்கின்றார்.

பிரிட்டிஷ் அதிகாரம் இந்தியர் கைக்கு மாறினாலும், அது முஸ்லிம்கள் கொண்ட பாகிஸ்தான் என்றும், இந்துக்கள் கொண்ட இந்துஸ்தான் என்றும் இரண்டு பாகமாகப் பிரிக்கப்பட்டு ஆட்சி செய்யப்படும் என்பதை ஸ்ரீ ரங்கநாதன் அறிவார் என்றே நினைக்கின்றேன். ஆகையினால் முஸ்லிம்கள் பிரார்த்தனை செய்யும் நாளான வெள்ளிக்கிழமையை அவர்கள் பாகமாகிய பாகிஸ்தானில் விடுமுறை நாளாகக் கொள்ளட்டும். அதைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

இந்துஸ்தான் என்பது ஒரே மதத்தினரால் ஆக்கப்பட்ட நாடு அல்ல. அது பல மதத்தினரும் வாழ்ந்து வரும் தேசம்; ஸ்ரீ ரங்கநாதனின் கடிதப் போக்குப்படி முஸ்லிம்களும் இந்துக்களும் மட்டும் கொண்டதல்ல. இந்தியாவிலுள்ள இந்தியக் கிறிஸ்தவர்கள் ரங்கநாதனின் கண்களின் முன்னால் தென்ப... வில்லை போலும். ஆங்கிலேயர் இந்தியா... விட்டுச் சென்றால் கிறிஸ்தவ மதமும் அ... களுடன் சென்றுவிடும்? ஆகையி... வெள்ளிக்கிழமையை விடுமுறையாக மாற்... ஞாயிற்றுக்கிழமையை வேலை நாளாகச் செ... வது இந்தியக் கிறிஸ்தவர்களுக்குப் பெ... கஷ்டத்தை உண்டாக்கும் என்பதை... ஸ்ரீ ரங்கநாதன் அறியவில்லை.

வெள்ளிக்கிழமை அம்மனுக்கு ஏற்ற தி... மாதலால் அந்நாளில் கடவுளைத் தொ... வேண்டுமென்றும், ஞாயிற்றுக்கிழமைகளி... சினிமா, நாடகம் பார்க்கத்தான் தோன்... கிறதென்றும் அவர் கூறியுள்ளார். ஸ்ரீ ர... நாதன் வெள்ளிக்கிழமை முழுவதும் கடவுளை... தொழுது கொண்டிருக்க மாட்டார் என்... நினைக்கின்றேன். அவருக்குக் கடவுளை... தொழுத நேரம் தவிர மற்ற நேரங்களி... சினிமாவுக்கும், நாடகத்திற்கும் போக... தோன்றாதா? காலத்தைப் பயனுள்ளதாக்... வேறு வழியே யில்லையா? சினிமாவுக்கு... நாடகத்திற்கும்தானா போகத் தோன்றும்... சினிமாவும், நாடகமும் இரவு வேளைகளி... தானே நடக்கின்றன? ஆகையால் ம... றைய நாட்களிலும் அவ்வெண்ணம் தோ... றாதா? காலத்தைப் பயனுள்ளதாக்கி... கொள்ளத் தெரியாத ஸ்ரீ ரங்கநாதனை... போன்ற சுதந்திரப் பிரியர்களை என்னென்... சொல்வது!

காலத்தைப் பயன் படுத்தத் தெரியா... நேரத்தில் இந்தியக் கைத்தொழிலை வளர்ப்... தும், லாபகரமானதும், திருவள்ளுவரா... போற்றிக் கூறப்பட்டதுமான நூல் நூற்கு... புண்ணியத் தொழிலை ஸ்ரீ ரங்கநாதன் ஏ... மேற்கொள்ளக் கூடாது? அதனால் இந்திய... கைத்தொழிலை ஆதரிப்பவர் என்னும் பெ... மையும் அவருக்குக் கிட்டுமல்லவா?

இப்படிக்கு,
ஜே. அலக்ஸாண்ட...

★

திருமணக் கடிதங்களின் தலைப்பில் சிலர் பிள்ளையார் சுழி போடுவார்கள். வேறு சிலர் ''ஸ்ரீராமஜெயம்'' என்று போடுவார்கள். ''ஸ்ரீ ராஜாஜி ஜயம்'' என்று தலைப்பில் அச்சிட்ட திருமணக் கடிதம் ஓர் அதிசயமே அல்லவா? பரமக்குடி தேச பக்தரும் ராஜாஜி அன்பருமான ஸ்ரீ ஜி. கோவிந்தன் அவர்கள், தமது புதல்வி திருமதி நாகலட்சுமிக்கும், முத்தலாபுரம் திரு. நாகராஜா அவர்களின் குமாரர் ஸ்ரீ அழகர்சாமிக்கும் ஜூலை 10-ல் நடந்த திருமணத்துக்கு மேற்கண்டவாறு திருமணக் கடிதம் அச்சிட்டிருந்தார். ராஜாஜியின் ஆசியினால் மேற்படி தம்பதிகள் சகல சௌபாக்கியங்களையும் பெற்று நீடூழி வாழ்வார்களாக!

★



ஜூலை 25உ முதல் மகத்தான ஆரம்ப விழா

விக்ரம் ஆர்ட்ஸ்

# பக்த துளசிதாஸ்

டைரக்ஷன்.. B. S. ரங்கா

பங்களூர் மூவிலண்ட் தியேட்டரில்

இவ் வருஷத்திய மகோன்னத இசைச் சித்திரம்

வித்வான் B. S. ராஜய்யங்கார் ● லக்ஷ்மிரங்கா ● C. V. V. பந்துலு ● ஜோக்கர் ராமுடு ● குமாரி துளசி முதலியவர்கள் நடித்தது

தமிழ்நாடு டாக்கீஸ்

161, மவுண்ட் ரோட், மதராஸ்










தமிழ் நாட்டின் இதர இடங்களில் விரைவில் வெளியாகும் நன்னாளை எதிர்பாருங்கள்

இப்பொழுது
தான் என் சட்டைகள்
உண்மையாகவே
வெளுப்பாகவும்
சுத்தமாகவும்
இருக்கின்றன!

ஆம் —
அது நான்
ஸன்லைட் சோப்
உபயோகிக்க
ஆரம்பித்திருப்
பதனால் தான்!

ஸன்லைட்டால் சுத்தம் செய்யப்பட்ட ஆடைகள் எப்பொழுதும் முன் இருந்ததை விட அதிகச் சுத்தமாகவும் வெண்மையாகவும் காண்கின்றன. ஸன்லைட்டின் தாராளமான நுரை ஒவ்வொரு இழைகளிடையேயும் புகுந்து அழுந்தத் துவைக்காமலே—ஜாஸ்தி அழுக்குப்படிந்த பாகங்களிலிருந்துகூட—மலினங்களைப் பூராவும் சுலபமாக அகற்றுகிறது. இச்சோப் மகிழ்ச்சிதரும் புதுமையையும் மணத்தையும் துணிகளுக்குக் கொடுக்கிறது. மேலும் உங்கள் கைகளுக்கு நன்மையளிப்பதையும் காண்பீர்கள்.




# ஸன்லைட் சோப்

S. 88-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED


CP/MC/114





# நம்பகமாக வாங்குவதற்கு

உத்தரவாதம் வாய்ந்த
பேனுக்களையே
தேர்ந்தெடுங்கள் !

"வாட்டர்மேன்ஸ் பேனுக்கள் சென்ற 60 வருஷ காலத்துக்கு மேலாக உத்தரவாதம் வாய்ந்தவை. இப்பொழுதும் பரிபூரண உத்தரவாதம் கொண்டது.

ஒவ்வொருவர் கையெழுத்துக்கும் ஏற்ற உறுதியும் அல்லது வளையும் தன்மையும் வாய்ந்த அழகிய 14 காரட் நிப்புகள் கொண்ட பேனுக்கள் அநேக நூதன கலர்களில் கிடைக்கும்.

மிக துரிதமாகவும், சுத்தமாகவும், நேர்த்தியாகவும் மை போடக்கூடிய நீடித்து உழைக்கும் ஸெல்ப்-பில்லர் அமைக்கப்பட்டுள்ளது. ஸ்டேஷனரி, நகை வியாபாரிகள் ஸ்டோர்களில் கிடைக்கும்.

# Waterman's

## பேனுக்கள், பென்சில்கள், இங்க்



மாசு மருவற்ற, எழுத எழுத ஊற்றைப் போல் வரும் விதவிதமான ஒன்பது கலர்களில் உலகப் பிரசித்தி வாய்ந்த டிப்-பில் பாட்டில்களில் வாட்டர் மேன்ஸ் இங்க் இந்தியாவில் கூடிய சீக்கிரம் வாங்கக் கிடைக்கும்.



மை கட்டி தட்டுவதை வாட்டர்மேன்ஸ் இங்க் அடியோடு ஒழிக்கிறது

வாட்டர்மேன் பென் கோ., லிட்., "தி பென் கார்னர்"
41, கிங்ஸ்வே, லண்டன் W. C. 2.

இந்தியாவுக்கு ஏஜண்டுகள் : லாதம் அபர்குரோம்பி & கோ., லிட்.,
போர்பேஸ் பில்டிங், ஹோம் தெரு, போர்ட், பம்பாய்

**T. K. S. சகோதரர்களின்**

**நாடகம்**

★

# திண்டுக்கல்

# சோலை ஹாலில்

# 3-வது வாரம்

**27-7-47 முதல் 5-8-47 வரை**

★

நினசரி இரவு 9-30க்கு

# 'அந்தமான் கைதி'

(உரிமை பெற்றது)

கு. சா. கிருஷ்ணமூர்த்தி

எழுதியது

---

பிரதி புதன் விடுமுறை நாள்

---

டிக்கெட்:

**2-12-0, 1-10-0, 0-13-0, 0-6-6**

★

வெளியூர் வாசிகள் முன் பணம் அனுப்பி 1-வது 2-வது வகுப்புகளை இலவசமாக ரிசர்வ் செய்து கொள்ளலாம்

---



ஏஜண்டுகள்:—ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், தைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, பேர்ஹாம்பூர் & செகந்தராபாத்; கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

சிலோன் ஏஜண்டுகள்:—M. O. A. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு

# வரவேற்பு யாருக்கு?













போட்டிக் கதை—4.

ராக்கம்மாள் தன் தாயின் வீட்டுக்கு வந்து ஒரு வருஷமாகி விட்டது.

வழக்கமாய் அவளிடம் வந்து பேசிக்கொண்டிருக்கும் பக்கத்து வீட்டு அங்கம்மாள் அன்று அவளைப் பார்க்க வந்தாள். எதையோ நினைத்துக் கொண்டிருந்த ராக்கம்மாள், அவள் வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை.

"ராக்கு, ஏன் இப்படி உட்கார்ந்திருக்கே?" என்று அங்கம்மாள் கேட்டதும், அவள் சட்டெனத் திரும்பிப் பார்த்தாள்.

"வா, உட்காரு! என் விதியைத்தான் நெனைச்சுக்கிட்டிருக்கேன்."

"விதியா! அதுதான் இருக்கவே இருக்குதே! நீ நெனைச்சாலும் நெனைக்காட்டியும் அது பாட்டுக்கு நடக்கிறது நடந்துக்கிட்டுத்தானிருக்கும்......ம்...... நேத்து ஒரு விசயம் கேட்டியா?"

"என்ன அது?" என்று ஆவலாய்க் கேட்டாள் ராக்கம்மாள்.

"உன் புருசனும் அந்தக் குச்சக்காரியும் மணியகாரர் மாந்தோப்புக்கிட்டே நின்னு வெகு நேரம் பேசிக்கிட்டிருந்தாங்களாம்!"

"எவளைச் சொல்றே?"

"அவதான், அந்தச் செல்வி!"

"சே, சே! இருக்காது. எம் புருசன் குணம் எனக்குத் தெரியும். ஊராரு கண்டபடி பேசவாங்க: அதையெல்லாம் நம்பலாமா?"

"அப்படின்னு, உன்னை அந்த மனுசன் இந்த ஒரு வருசமா ஏன் மறந்திட்டு இருக்காரு? நம்ம சன்ன சாதி வழக்கப்படி தீர்த்துக் கட்டிடலாமே, அவரு?"

"அப்படியெல்லாம் சொல்லாதே, அங்கம்மா! என்னமோ என் பொல்லாத வேளை, அன்னைக்கி அவரு சொன்ன ஒரு சொல்லுக்குப் பணிஞ்சு போகா

தது இவ்வளவு தூரத்துக்குக் கொண்டாந்து விட்டிருச்சு. பார்க்கலாம், இன்னும் எவ்வளவு காலக்குந்தான் அவரு கோவமிருக்குன்னு?"

"ராக்கு, நம்மளே இந்த மாதிரி ஒரு வருசம் பெண்டாட்டியை விட்டுட்டு இருந்தவங்களை நான் பார்த்ததே யில்லே. ஒரு வேளை நீயே நீர்த்துக் கட்டிக்கட்டுமின்னு உன் புருசன் நெனைச்சிருக்குதோ?"

"எனக்கு யார் உதவியிருக்குது? அவரு பார்த்து என்ன வேணுமானாலும் செயயட்டும். நான் அதுக்கு ஒண்ணும் சொல்லப் போறதில்லே. எனக்கு இந்த வயசான தாயும் இல்லாட்டி, அவரைப் பத்தி ஊராரு தூத்தற மாதிரிதான் என்னையும் தூத்து வாங்க!"

"அதுக்காகத்தான் இந்த ஒரு வருசமா நீ உள்ளேயே அடஞ்சு கிடக்கிறியா? வெளியே, தெருவே வந்து போனாத்தானே கலகலப்பா யிருக்கும்?"

"அங்கம்மா, மனசிலே கவலை யிருக்கும் போது, வெளியே போயிட்டு வந்தா அது தீர்ந்து போகுமா? குளிக்கிறதுக்கு மாத்திரம் தினம் மணியகாரர் மாந்தோப்புக் கிணத்துக்குப் போயிட்டு வருவேன்; அவ்வளவுதான். அதுவே பெரிய ஆறுதலா யிருக்குது!"

"ஏன், ராக்கு! நீ இங்கே வந்ததுக் கப்புறம் ஒருநாள் கூட உன் புருசனை எங்கேயும் பார்க்கலே?"

"நான் கிணத்துலே யிருந்து வர்றப்போ எத்தனையோ தடவை பார்த்திருக்கேன். அவரு பாட்டுக்கு விலகிப் போயிருவாரு. நானும் தலையைக் குனிஞ்சுகிட்டே வந்துருவேன்."

"நீ நம்ம நாட்டாமைக்காருகிட்டே இந்த விசயத்தைச் சொன்னாலும், அவரு கட்டாயம் ஏதாச்சும் வழி செய்வாரு. நீ ஏன் போய்ச் சொல்லக் கூடாது?"

"நாட்டாமைக்காரு என்ன செய்ய முடியும்? எம் புருசனைக் கூப்பிட்டுக் கேப்பாரு. மனச வருத்தத்திலே விலகியிருக்கோமின்னு அவரு சொல்லுவாரு. அப்படின்னா, சாதி முறைப்படி நீர்த்துக் கட்டிக்கன்னு நாட்டாமைக்காரு சொல்லுவாரு. எம் புருசனும் 'சரி'ன்னு சொல்லிட்டா......?"

"சொன்னாச் சொல்லட்டுமே! உன் அழகுக்கு இந்த ஊரிலேயே எத்தனையோ பேரு போட்டி போட்டுக்கிட்டு வந்து கலியாணம் பண்ணிக்குவாங்களே!"

"அங்கம்மா, ஒருத்தருக்கு வாழ்க்கைப் பட்டு மூணு வருச காலம் கழிச்சிட்டு அப்புறம் இன்னொருத்தரைக் கலியாணம் பண்ணிக்கிறதா?"

"ராக்கு, நீ உலகம் தெரியாமெப் பேசறே! நான் கேள்விப்பட்டதிலே யிருந்து இன்னும் ரெண்டு மாசத்துக்குள்ளே உன் புருசன் அந்தச் செல்வி கழுத்திலே தாலியைப் போட்டிருமின்னுதான் தெரியுது."

"செய்துக்கட்டுமே, நான் இப்படியே யிருந்து காலத்தைக் கழிச்சிட்டுப் போறேன்!" என்றாள் ராக்கம்மாள்.

இந்தச் சமயத்தில் வெளியே சென்றிருந்த அவளுடைய தாயும் உள்ளே வந்தாள்.

"என்ன ராக்கு, ஏன் இப்படி உட்கார்ந்திருக்கே? இன்னும் அடுப்பே பத்த வைக்கலே போலிருக்கே? அங்கம்மா வந்துட்டாளாக்கும், பேச்சுக் குடுக்க?" என்று வேடிக்கையாகவே கேட்டாள் தாயார்.

"சரிதான், நானு வந்து உன் மகளின் கையைப் புடிச்சுக்கிட்டேன்? இதோ, நான் போறேன். எனக்கும் வீட்டு வேலை கிடக்குது!" என்று சொல்லிவிட்டு அங்கம்மா எழுந்து போய்விட்டாள்.

ராக்கம்மாளும் தன் தாயாருக்குத் தெரியாமல் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு வீட்டு வேலையைக் கவனிக்க எழுந்து போய்விட்டாள்.

## 2

மணியகாரர் மாந்தோப்பு என்றால் அந்தக் கிராமத்தில் எல்லோருக்கும் தெரியும். சுமார் இருபது ஏக்கர் விஸ்தீரணமுடையது. எல்லாவிதமான மாமரங்களும் அதில் இருந்தன. உள்ளே வெய்யில் படாதபடி அவ்வளவு அடர்த்தியாக மரங்கள் வளர்ந்திருந்தன. தோப்பின் மத்தியில் ஒரு பெரிய கிணறு. அதற்குள் இறங்கிக் குளிப்பதற்காகப் படிகள் கட்டி விடப்பட்டிருந்தன. அதிகாலையிலிருந்து மத்தியானம் வரை ஆண்கள் வந்து குளிப்பார்கள். அதற்குப் பின் பெண்கள் வருவார்கள். மணியகாரர் அதற்கெல்லாம் ஒன்றும் சொல்லமாட்டார். மரங்களிலுள்ள காய்களையோ பழங்களையோ யாரும் தொடாதபடி பார்த்துக்கொள்வதற்கு மாத்திரம் ஒரு காவற்காரன் இருந்தான்.

ராக்கம்மா தன் கணவனை விட்டு வந்த நாள் முதல் அவளுக்கு அவனைப் பற்றிய கவலைதான். அவனைச் சந்திக்கும்போது, பல தடவைகளில் அவனை ஜாடையாகக் கவனித்திருக்கிறாள். அவன் உடம்பு நாளுக்கு நாள் இளைத்துக் கொண்டு வருவதைக் கண்ட அவள், 'ஐயோ, பாவம்! தானுகவே சமைத்துச் சாப்பிடுகிறார். வாய்க்கு ருசியா வைச்சுக் குடுக்க ஆளில்லே!' என்று எண்ணி வருத்தப்படுவாள். ஆனால் என்ன பிரயோஜனம்? அவர்களிருவரையும் சமாதானம் செய்து, சண்டையைத் தீர்த்து வைக்க யாரும் முன் வரவில்லை.

வழக்கம்போல அன்று அவள் கிணற்றில் இறங்கிக் குளித்துக் கொண்டிருந்தாள். வேறு பெண்கள் யாருமே யில்லை. ஆனாலும் அவளுக்குப் பயமே தோன்றவில்லை. ஏனென்றால் அந்த நேரத்தில் பெண்களைத் தவிர அங்கே ஆண்கள் யாரும் வரமாட்டார்களென்பது அவளுக்கு நிச்சயமாய்த் தெரியும். உடம்பை மறைக்க ஒரு சிறு துண்டை மாத்திரம் கட்டிக் கொண்டு நிச்சிந்தையாகப் படியில் உட்கார்ந்தபடி உடம்பை நன்றாய்த் தேய்த்துக்கொண்டு கிணற்றில் இறங்கி நீந்த ஆரம்பித்து விட்டாள். கிணற்றில் யாருமே இல்லாத படியால் அவளுக்கு உற்சாகம் அதிகமாகி விட்டது. கிணற்றைச் சுற்றிச் சுற்றி வட்ட வட்டமாய் நீந்திக்கொண்டே வந்தாள்.

"அஹ்ஹஹ்ஹா......!" என்று யாரோ வாய்விட்டுப் பலமாகச் சிரிக்கும் சத்தம் கிணற்று மேட்டிலிருந்து கேட்டது! அது ஆண் குரல்தான் என்று ராக்கம்மாளுக்கு நன்றாய்த் தெரிந்தது. அவள் மனமும் உடலும் வெடவெட வென்று நடுங்கி விட்டன. தன்னை அந்த நிலையில் யாரோ ஓர் ஆண்பிள்ளை பார்த்து விட்டானே என்ற எண்ணம் அவளைத் தாக்கியதும், படிக்கட்டின்மேல் துவைத்துப் பிழிந்து வைத்திருந்த சேலையை எடுத்து உதறி, அவசர அவசரமாகக் கட்டிக் கொண்டு மேலே அண்ணாந்து பார்த்தாள். கிணற்று மேட்டிலிருந்த மாமரக் கிளையி லிருந்து அப்போதுதான் ஒருவன் தடாலெனத் தரையில் குதித்தான். அவனை அவளுக்கு நன்றாய்த் தெரியும். அவன் பெயர் பெரிய கருப்பன்.

கோபம் பொங்கியது அவளுக்கு.

"ஒரு பொம்பளை குளிக்கும்போது, ஒரு ஆம்பளை ஒளிஞ்சிருந்து பார்க்கலாமா? உனக்குப் புத்தி கித்தி இருக்குதா ......?" என்று கிணற்றுக்குள்ளிருந்தபடியே சத்தம் போட்டாள்.

"ராக்கம்மா, என்ன ரொம்பக் கோவமாப் பேசறே? உன்னை எனக்குத் தெரியாதா? பார்த்ததினாலே என்ன மோசம் வந்துருச்சு?" என்று சிரித்துக் கொண்டே சொன்னான் பெரியகருப்பன்.

"என்ன மோசம் வந்துட்டுதன்னு கேட்கிறே? இந்த விசயம் புருசன் காதிலே விழுந்தா உன்னை லேசிலே விட்டுடுவாரா? இப்ப மாத்திரம் இந்த இடத்திலே அவர் இருந்தா, உன்னை வெட்டி எறிஞ்சிருப்பாரு, தெரியுமா?"

"அட பைத்தியமே! இனி உன் புருசன் கிவனுண்டி உன்னைக் கூப்பிட்டு வைச்சு வாழப்போறானு? அவன்தான் உனக்குத் தீர்த்துப் பணம் குடுத்து உன்னை ரத்துப் பண்ணிட்டு வேறே புதுக் கலியாணம் பண்ணிக்கப் போறானே?"

"செய்துக்கட்டுமே! அதைப் பத்தி உனக்கென்ன அவ்வளவு அக்கறை?"

"அக்கறையோ, இக்கரையோ? நீ வேறே என்னதான் செயயப் போறே?"

"நான் என்னமோ செய்துக்கிறேன். அதைப்பத்தி நீ என்ன கேட்கிறது?"



கோடை கன்னல் ராவ்பகதூர் அம்மைத் துரை நாதமுனி செட்டியாரின் அபிமான பௌத்திரி சௌ. சுந்திரிக்கும், சாந்த எஞ்சேரி துரைசாமி ஐயர் குமாரச் சிரஞ்சீவி லக்ஷ்மிநாராயணனுக்கும் வெகு விமரிசையுடன் ஜூலை மாதம் 16-ல் திருமணம் நடந்தது. பல பிரமுகர்கள் திருமணத்திற்கு விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்தனர்.



"அந்தமாதிரி அவன் வேறே கல்யாணம் செய்துக்கிற போது, நீ என்னை மறந்திடாதே!"

"உன்னையா! உம் மூகத்துக்கு...... சரி, இங்கே யிருந்து பேசிக்கிட்டிருக்கிறது கூடத் தப்பு!" என்று சொல்லி விட்டு, அவன் படியின் மேலேறி வெளியே வந்தான்.

அவனும் படிப் பக்கம் வந்து அவன் முன்னால் நின்றான். அவன் அவளை விறைக்கப் பார்த்தான்.

"இப்ப என்ன சொல்லுறே, ராக்கம்மா?"

"என்ன சொல்றது? சொல்றேன், அதுக்கும் காலம் வரட்டும்!" என்று சொல்லி விட்டு, அவனை லட்சியம் செய்யாமல் வேகமாய்த் தோப்பை விட்டு வெளியே வந்தாள்.

அவள் பின்னாலேயே வந்த பெரியகருப்பன், "ராக்கம்மா, ரெண்டு வருசத்துக்கு முந்தி, நீயும் உன் புருசனும் அர்த்த சாமத்திலே பயாஸ்கோப் பார்த்திட்டு வந்தப்ப, நான் வாரணிக் கரையிலே யிருந்து ஓடியாந்து வழி மறிச்சேனே, நெனைவிருக்குதா? அப்பவே அவனை வெட்டி எறிஞ்சிருப்பேன். உன் மூகத்துக்காகத்தான் விட்டேன். அந்த நன்றியை நெனைசப் பாரு!" என்று ஞாபகப்படுத்தினான்.

"அப்படி நீ அவரை அன்னைக்கி வெட்டியிருந்தா, நான் உன்னை உயிரோடே விட்டிருப்பேனா? ஒண்ணு, என் உயிரு போயிருக்கும்; இல்லேன்னு உன் உயிரை வாங்கி யிருப்பேன்! கள்ளச் சாதியிலே பொறந்த ராக்கம்மான்னு நெனைச்சுக்க!" என்றாள் வீரமாக.

"சரி, வருவே! இன்னொரு நாளைக்கி வந்து மாட்டிக்குவே! அப்பச் சொல்றேன்!" என்று கருவினான் பெரிய கருப்பன்.

"பார்த்துக்கலாம். நீயும் நானும் ஒரே சாதியிலே பொறந்தவங்கதான். நீ ஆம்பளை; நான் பொம்பளை. அது தானே வித்தியாசம்? உனக்குச் சமத்து இருந்தா என்னை வெட்டு; எனக்குச் சமத்து இருந்தா நான் பார்த்துக்கிறேன்!" என்று சொல்லி விட்டு, அவள் வேகமாய்ப் போய்விட்டாள்.

இன்று அவன் நடந்து கொண்டதி லிருந்து அவனுடைய கெட்ட எண்ணம் தெரிந்து விட்டது.

ராக்கம்மா வீட்டுக்கு வந்ததும் நல்ல சேலையை எடுத்துக் கட்டிக் கொண்டு, ஈரச் சேலையை உலர வைத்துவிட்டு, சாப்பாடு போட்டுக் கொண்டு சாப்பிட ஆரம்பித்தாள்.

பெரியகருப்பன் ஞாபகப்படுத்திய — இரண்டு வருஷங்களுக்குமுன்னால் நடந்த — அந்தச் சம்பவம் அவள் நினைவுக்கு வந்தது.

* * *

அனுமான் வைத்த நெருப்பு இலங்கா புரியின் மாடமாளிகை, கூட கோபுரங்களை யெல்லாம் கொழுந்து விட்டு எரியும்படி செய்து கொண்டிருந்தது. புகையும் நெருப்பும் வானை யளாவிப் பாய்ந்தது. கட்டிடங்கள் இடிந்து தகர்ந்தன. ஜனங்களெல்லாம் நாலா பக்கமும் சிதறி ஓடினார்கள். அதோடு சினிமாப் படமும் முடிந்தது.

படம் பார்க்க வந்திருந்த கூட்டத்தாரும் பெரிய ஆரவாரத்தோடு கொட்டகையை விட்டு வெளியே வந்து பல திசைகளிலும் பரவி, தங்கள் தங்கள் கிராமத்தை நோக்கி நடந்தார்கள். இரவு இரண்டு மணி யிருக்கும். நல்ல நிலா வெளிச்சம். பெண்களெல்லாம் சேர்ந்து கூட்டம் கூட்டமாய்ப் போய்க்கொண்டிருந்தனர். தம்பதிகள், கூட்டத்தில் கலந்து கொள்ளாமல் தனித் தனியாய்ப் பிரிந்து போய்க் கொண்டிருந்தார்கள். சில வாலிபர்கள் படத்தில் இராமன் பாடிய பாட்டைச் சத்தம் போட்டுப் பாடிக் கொண்டே சென்றார்கள். இன்னும் சிலர் அசோக வனத்தில் சீதை

மரத்தடியில் உட்கார்ந்து இராமனை நினைத்துப் புலம்பிய பாட்டைப் பாடிச் சென்றார்கள். கூட்டம் முழுவதுமே சந்தோஷமாய்த்தான் போய்க் கொண்டிருந்தது.

சொக்கம்பட்டியிலிருந்து வந்த சிவனாண்டியும், அவன் மனைவி ராக்கம்மாளும் அந்தக் கூட்டத்தோடு போய்க் கொண்டிருந்தனர். அவர்களுக்குக் கல்யாணமாகி அப்போதுதான் ஒரு வருஷமாகியிருந்தது. மற்றவர்களெல்லாம் படத்தைப் பற்றி 'சளசள' வென்று பேசிக்கொண்டு செல்கையில், ராக்கம்மாள் மாத்திரம் மௌனமாய் வருவது சிவனாண்டிக்கு என்னவோ போலிருந்தது.

"ராக்கு, ஏன் பேசாமே வர்றே? தூக்கம் வந்திருச்சா?" என்று மெதுவாகக் கேட்டான்.

அவள் லேசாகச் சிரித்துக் கொண்டே, "தூக்கமா? இந்தப் படத்தைப் பார்த்தப்புறம் தூக்கம் வேறே வருமா? துக்கமாத்தான் வருது!" என்றாள்.

"துக்கமா! ஏன்? படம் நல்லாயில்லையா?"

"படம் நல்லாத்தானிருந்தது. சீதை, ராமரோடே இருக்கும்போது எவ்வளவு சந்தோசமாயிருந்தா; அப்புறம் வனவாசத்திலே என்ன கஷ்டப்பட்டா; அதோடே போகாமே லங்கையிலே வந்து அந்த ராமரை நெனைச்சு நெனைச்சு எவ்வளவு அழுதா! அதை யெல்லாம் நெனைக்கும்போது எனக்குத் தூக்கம் எப்படி வரும்?"

"ப்பூ. இதுக்குத்தானா இப்படி 'உம்' முன்னு வர்றே? இந்தச் சீதைக்குச் சரியா அழவே தெரியலே! உன்னை நான் கலியாணம் செய்யறதுக்கு முந்தி, போன வருசம், நம்ம ஊரு மந்தை வெளியிலே அரிச்சந்திர நாடகம் நடந்துச்சு, பாரு—அதுலே வந்த சந்திரமதி அழுதா, அழுதா, அப்படி அழுதா! லோகிதாசனை மடியிலே போட்டுக்கிட்டு, 'அப்பா மகனே, மாண்டாயோ!' அப்பிடின்னு ஆரம்பிச்சவ, எவ்வளவு நேரம் அழுதா, தெரியுமா? ஜனங்கள்ளாம் கூடச் சேர்ந்து அழ ஆரம்பிச்சிட்டாங்க. நம்ம நாட்டாமைக்காரரு வந்து, சந்திரமதியை உள்ளே போகச் சொன்னப்புறம்தானே அவ அழுகை நின்னுச்சு!"

"அப்பன்னா, இன்னைக்கி உங்களுக்கெல்லாம் அழுகை வரவே யில்லையா?"

"வந்துச்சு; ஆனா அவ்வளவு ரொம்ப இல்லே! கண்ணு கலங்குச்சு; அதுக்குள்ளே அனுமாரு வரவும் அழுகை மாறிப் போச்சு!"

"சரி; காலைக் கொஞ்சம் எட்டிப் போடுங்க. நம்ம தான் கடைசியிலே போறோம் போலிருக்குது. எல்லாம் நமக்கு முன்னாலே போயிட்டாங்களே!"

"போகட்டுமே! நமக்கு என்ன பயமா? இந்த நெலா வெளிச்சத்திலே நடக்கிறது எவ்வளவு நல்லா இருக்குது? இந்த மாதிரி நடக்கக் குடுத்து வைக்கணுமே!"

"எனக்கும் சந்தோசமாத்தானிருக்குது! நான் பயத்துக்காகச் சொல்லலே; வீட்டிலே போயி கொஞ்ச நேரம் நல்லாத் தூங்கலாமேன்னு சொன்னேன்."

"விடியறதுக்கு இன்னம் ரொம்ப நேரமிருக்கு, ராக்கம்மா! நாளைக்கி எனக்கும் வயல்லே வேலை யில்லை. நிம்மதியாத் தூங்கலாம், பொழுது கிளம்புற வரையிலே!"

அவர்களுக்குப் பின்னால் இரண்டு வாலிபர்கள் பேசிக் கொண்டு வந்தார்கள். அவர்கள் சத்தத்தைக் கேட்டதும் ராக்கம்



மாளும் சிவனாண்டியும் தங்கள் பேச்சை நிறுத்திக் கொண்டார்கள்.

"யாரு? சிவனாண்டியா? எதப்பா, புதுசா இருக்குது? ரெண்டாவது ஆட்டத்துக்கு வந்துட்டியே? அதுவும் சம்சாரத்தோடே?" என்று வேடிக்கையாகக் கேட்டான் அந்த வாலிபர்களில் ஒருவன், நடந்து கொண்டே.

"என்னமோ இன்னைக்கித்தான் எனக்குச் சௌரியப் பட்டுச்சு. வயல்லே யிருந்து திரும்பி வர்றதக்குள்ளேதான் விளக்கு வைக்கப் போகுதே! முதல் ஆட்டத்துக்கு எப்படி வர முடியும்?' என்றான் சிவனாண்டி பதிலுக்கு.

"சரி, ஜாக்கிரதையாப் பார்த்துப் போ, சீக்கிரம்!" என்று சொல்லி விட்டு அவர்களிருவரும் முன்னால் வேகமாகச் சென்று விட்டார்கள்.

பேசாமலே வந்த ராக்கம்மாள், வாலிபர்கள் எச்சரித்ததைக் கேட்டு, "ஏன் அவுக அப்படிச் சொல்லிவிட்டுப் போறாங்க?" என்று தன் கணவனைக் கேட்டாள்.

"வேறே ஒண்ணுமில்லே. அந்த ஊரணிக் கரை ஓரமா, ரெண்டு நாளைக்கு முன்னாலே இப்பிடித்தான் நம்மளைப்போல சினிமாப் பார்த்துட்டுப் போன புருசன் பெண்டாட்டி ரெண்டு பேரை, யாரோ திருடனுக வழி மறிச்சு அடிச்சு அவுக கையிலே யிருந்த காசு, நகை, பொட்டுப் பொடியெல்லாம் பிடுங்கிக்கிட்டு ஓடிட்டானுகளாம். அதுக்காகச் சொல்லிட்டுப் போறாங்க!"

"இந்த விசயத்தை வீட்டிலேயே சொல்லி யிருந்தா நான் வந்திருக்க மாட்டேனே!"

"அது தெரிஞ்சுதான் நான் சொல்லலே!" என்று சிரித்தான் சிவனாண்டி.

அவர்களிருவரும் இவ்வாறு பேசிக் கொண்டே அந்த ஊரணிக் கரை ஓரம் வந்து விட்டார்கள். கரைமீது சில இடங்களில் கூட்டமாக, அடர்த்தியாக மரங்கள் வளர்ந்திருந்தன. மதகு வழியாக வழிந்தோடும் தண்ணீரின் இரைச்சல் தூரத்தில் 'சோ' வென்று கேட்டுக் கொண்டிருந்தது. மரங்கள் கூட்டமாக இருக்கு மிடத்தை நெருங்கி, சாலை ஓரமாக வரும்போதெல்லாம் ராக்கம்மாளுக்குப் பயமா யிருந்தது. அந்த மரக் கூட்டத்திலிருந்து யாராவது திடீரென வந்து பாய்ந்தால் என்ன செய்கிறதென்று அவளுக்குப் பீதி. அப்போதெல்லாம் அவள் தன் கணவனுடன் ஒட்டிக் கொண்டே நடந்தாள். அவள் உண்மையிலேயே பயப்படுகிறாள் என்று அறிந்த சிவனாண்டி, பயத்தைப் போக்குவதற்காக அவனுக்குத் தெரிந்த தெம்மாங்கில் நான்கு அடியைச் சத்தம் போட்டு, ராகம் இழுத்துப் பாடினான்.

"தன்னந் தனி வழியே
சாலையிலே போற எந்தன்
தனிக்காட்டு மாடுகளா,
சட்டுனுதான் போங்களேன்!
ஊரும் அதோ வந்திடுச்சு,
தெரியலையா, உங்களுக்கு?
ஊணுறக்க மில்லாமே
உக்காந்திருப்பா, அவ!"

அவன் பாட்டு, அந்த அமைதியான நேரத்திலே வெகு தூரம் வரை எட்டியது. சாலையோரம் இருந்த புதரிலிருந்த ஒரு முயல் குட்டி அதைக் கேட்டுப் பயந்து அவர்கள் முன்னால் குறுக்கே விழுந்தடித்து ஓடியது. அதற்குள் அவர்கள் ஊரணிக் கரையை அநேகமாகத் தாண்டி விட்டார்கள். அவளுக்கும் சற்றுப் பயம் நீங்கியது. அதே சமயத்தில்தான் திடீரென இரண்டு பேர் சாலையை நோக்கிச் சரசர வென்று கண்மாய்க் கரை இறக்கத்தில் இறங்கி ஓடிவந்தார்கள். அவர்கள் கையில் நீண்ட தடிகள் இருந்தன.

"யாருடாப்பா, அது? தெம்மாங்கு பாடிக்கிட்டுத் தெம்பா வாரது?" என்று சொல்லிக் கொண்டே, சிவனாண்டி முன்னால் வந்து நின்றான் ஒருவன்.

சிவனாண்டியின் பின்னால் மறைந்து நின்று கொண்டாள் ராக்கம்மாள். மற்றொரு திருடன் தன் இடையில் செருகியிருந்த அரிவாளை எடுத்தான். அந்த நிலா வெளிச்சத்தில் அது பளபள வென்று மின்னியது.

"என்ன, பெரியகருப்பா! கொல்லன் தெருவிலேயே ஊசி விக்க வந்தவன் கதையா, என்னையே மடக்கி நிறுத்திட்டியே!" என்றான் சிவனாண்டி சிரித்துக் கொண்டே.

அரிவாளை எடுத்தவன், "ஓ! நம்ம சிவனாண்டியா? எப்படிடா எங்களை அடையாளம் கண்டுட்டே?" என்று கேட்டான் அவன் ஆச்சரியத்துடன்.

"என்னடாப்பா, இது தெரியாதா? தலையிலே பெரிய முண்டாசு கட்டிக்கிட்டு, மொகத்தை மறைச்சிக்கிட்டு வந்தா, பேச்



## இதுவும் ஒரு கோவில்



ஸ்ரீ தியாகராஜர் வீற்றிருக்கும் திருவாரூரில் இந்த அழகிய கலைக் கோவில் சமீபத்தில் கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. ஸ்ரீ டி. கே. சித்தி விநாயக முதலியார் என்னும் அன்பர் காலஞ் சென்ற தம் தந்தையின் ஞாபகார்த்தமாகப் பத்தாயிரம் ரூபாய் செலவு செய்து, இந்த இலவசப் புத்தகசாலையை அமைத்துள்ளார். "கல்யாண சுந்தர முதலியார் இலவச நூல் நிலைய"த்தைப் போலத் தமிழ்நாட்டில் ஊருக்கு ஒரு இலவச நூல் நிலையம் ஏற்படும் காலத்தை எதிர்நோக்குவோமாக.

---

க் குரல் கூடவா தெரியாமப் போகும்? அடே, முண்டாசை! என் பெண்டாட்டி ரொம்பப் பயப்படுறா!"

முன்னால் வந்து அவனைத் தடுத்து நிறுத்திய பெரிய கருப்பன், "இன்னைக்கி காக்க முழிச்ச முகம் சரியில்லே. பொறப்படும் போதே நல்ல சகுனமும் இல்லே!" என்று சலித்துக் கொண்டான்.

"ஏன், இதுக்கு முன்னாலே போனவுங்க யாரையும் சோதனை போடலையோ?"

"கூட்டமாய்ப் போறவுங்களை மறிச்சா ஆபத்து இல்லே. இந்தமாதிரி தனியா யாரும் வந்தாத்தான் எங்களுக்கு வேட்டை. எங்க பொல்லாத வேளை, இன்னைக்கி நீதான் தனியே வந்தே!" என்றான் அரிவாளை வைத்திருந்தவன்.

"ஏன், எங்களையும் வேணுமின்னு மொட்டி உருட்டிப் பாரேன்!"

"ஆமா, இருக்கிருந்து உன்னைத்தானே மொட்டனும்? நீயோ பணக்காட்டு சரி; எங்க சலசலப்புக்குத்தானா பயப்படப் போறே? சரி, போ! நாங்க இன்னும் கொஞ்ச நேரம் இருந்துட்டு வாரோம்" என்றான் பெரியகருப்பன்.

"இனிமே யாரப்பா வரப் போறாங்க? நாங்கதான் கடைசியா வர்றோம். பேசாமே வந்து வீட்டிலே படுத்துத் தூங்குங்க!"

"தூக்கத்தைப் பார்த்தா முடியுமாப்பா? இன்னைக்கி ஒரு வழியும் பிறக்கலே. நாளைக்கிச் சந்தைக் கெடுவு. இன்னும் கொஞ்ச நேரத்திலே பார வண்டிக வரும். எதாவது அகப்படுதான்னு பார்த்துட்டு வாரோம" என்று சொல்லி விட்டு, அவர்களிருவரும் கண்மாய்க் கரையை நோக்கிப் போனார்கள்.

சிவனாண்டி, தன் மனைவியின் பக்கம் திரும்பிப் பார்த்தான். அவள் அந்தத் திருடர்களையே கவனித்துக் கொண்டிருந்தாள். அவள் கையை மெதுவாகப் பிடித்து, "ராக்கம்மா, போகலாமா?" என்றான் சிவனாண்டி.

பதில் பேசாமல் அவளும் நடந்தாள்.

* * *

"சாப்பிட்டு எவ்வளவு நேரமாகுது? கையைக்கூடக் கழுவாமே ஏன் இப்படி பேய் பிடிச்சவ மாதிரி உட்கார்ந்திருக்கே?" என்று அவனுடைய தாயார் சத்தம் போட்டதும்தான் ராக்கம்மாளின் நீண்ட சிந்தனை கலைந்தது. "எதையோ நெனைச்சுகிட்டே அப்படியே உக்காந்திட்டேம்மா!" என்று சொல்லி விட்டு, வேகமாய் எழுந்து கையையும் நன்றாய்க் கழுவிவிட்டு, தட்டையும் அலம்பி வைத்தாள்.

"உனக்கு எந்த நேரமும் அந்தப் புருசன் நெனைப்புத்தான்! அவனைத் தொலைச்சுத் தலை முழுகவும் மாட்டேங்குறே; வேறே ஒருத்தனையும் கட்டிக்க மாட்டேங்குறே! அப்புறம் ஏன் இப்படிக் கவலையா உட்கார்றே?" என்று கோபித்துக் கொண்டாள் அவள் தாயார்.

"அம்மா, எம் புருசனைப் பத்தி நீ ஒண்ணும் சொல்லாதே! அவரா வலிய வரட்டும்னுதான் பார்த்துக்கிட்டிருக்கேன்."

"நீயே வரட்டும்னு அவன் பார்த்துக்கிட்டிருக்கான்! இது எப்படித்தான் தீருமோ!" என்று கோபமாகச் சொல்லி விட்டு, தன் வேலையைக் கவனிக்க அவள் தாயார் போய் விட்டாள்.

3

அன்று பௌர்ணமி. ராக்கம்மாள் இருந்த தெருவிலுள்ள சிறு குழந்தைகளெல்லாம் நிலா வெளிச்சத்தில் மணல் வீடு கட்டி விளையாடிக் கொண்டிருந்தன. தன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தபடியே அவர்களையெல்லாம் பார்த்துச் சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தாள் ராக்கம்மாள். அவளுடைய தாயார் வீட்டுக்குள் படுத்திருந்தாள்.

"ராக்கம்மா! ராக்கம்மா!" என்று யாரோ பின்னாலிருந்து மெதுவாகக் கூப்பிட்ட சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். அவளுடைய கணவன் சிவனாண்டி அங்கே நின்று கொண்டிருந்தான்! அவளுக்குத் 'திகீர்' என்றது.

"பயப்படாதே. சத்தம் போடாமல் என்னோடு வா!" என்றான் சிவனாண்டி.

அவள் மறு வார்த்தை பேசாமல் அவன் பின்னால் சென்றாள். நிலா வெளிச்சம் பட்டப் பகல் போல் காய்ந்து கொண்டிருந்தபடியால், தெருவில் உள்ளவர்கள் யாரும் கவனிக்காதபடி யிருக்க, சற்றுத் தூரத்திலுள்ள ஒரு மரத்தடியில் போய் நின்றான் சிவனாண்டி. அவளும் வந்து பக்கத்தில் நின்றாள்.

"ராக்கு, நீயே வருவாய்னு நெனைச்சேன். ஆனா உன் பிடிவாதம் தெரிந்து விட்டது. என்னாலே பொறுமையா இருக்க முடியலே. இன்னைக்கி ஒரு நல்ல 'பயாஸ்கோப்' வந்திருக்காம். வா போகலாம்!"

அவள் பதில் சொல்லவில்லை.

"ஏன் பேசமாட்டேங்கிறே?" என்றான்.

"ரெண்டு வருசத்துக்கு முந்தி கண்மாய்க் கரை தூரம் நடந்தது மறுபடியும் நடக்கணுமா?...... அந்தப் பெரியகருப்பன் இன்னிக்கி வந்தா, என் கையாலே அவன் உயிரை வாங்கணும்!"

"ஏன்? அவன்மேலே உனக்கு என்ன அவ்வளவு கோவம்?"

"ஒரு மாசத்துக்கு முன்னாலே மணியக்காரர் மாந்தோப்பு விசயத்துலே......"

"அந்த விசயம் எனக்கும் தெரியும்!"

"தெரியுமா! தெரிஞ்சுமா இன்னம் அவன் உயிரோடே யிருக்கான்?"

"அது அவன் வேணுமின்னு செய்ததில்லே. நானேதான் உன் மனசைச் சோதிக்க அப்படியெல்லாம் அவனைப் பேசச் சொன்னேன்! அது மாத்திரமா? அக்கம்மா அடிக்கடி வந்து உன்னை வேறே கலியாணம் செய்துக்கத் தூண்டினதும் என் யோசனைப்படியேதான்......!"

"என்ன, நீங்க இவ்வளவு தந்திரமெல்லாம் கத்து வச்சிருக்கீங்களா?......ம்......சரி, இப்ப திடீர்னு என்னைப் பத்தி நெனைப்பு வரக் காரணம் என்ன?"

"புருசனுக்குப் பெண்டாட்டி மேலே நெனைவு வரக் காரணம்கூட ஒண்ணு இருக்குதா!"

"இப்படிச் சொல்ல உங்களுக்கு வெட்கமாயில்லியா?"

"அப்படி ரோசமாயிருந்துதான் ஒரு வருசம் வீணா ஓடிருச்சே! இந்த நெலாவைப் பார்த்ததும், ரெண்டு வருசத்துக்கு முந்தி நாம் ரெண்டு பேரும் பயாஸ்கோப் போன நெனைவு வந்துச்சு. இங்கே ஓடியாந்தேன்......"

இந்தச் சமயத்தில் எங்கிருந்தோ ஏதோ ஒருவிதமான வாடை வருவதை உணர்ந்த ராக்கம்மாள், "இங்கே என்னமோ ஒரு வாசம் அடிக்குதே? என்ன அது?" என்று கேட்டாள்.

"வாசமா! எனக்கு ஒண்ணும் தெரியலையே......ஓ இதென்ன மரம்? அத்தி மரம்தானே? சரிதான்; இது மாசி மாசமில்லே, அத்தி பூத்திருக்குது!" என்றான் சிவனாண்டி.

"நீங்க வந்ததும் அத்தி பூத்தது மாதிரி தானே!" என்றாள் ராக்கம்மாள்.

அதற்குள் பொறுமை யிழந்த சிவனாண்டி, "ராக்கு......!" என்று மெல்லிய குரலில் அழைத்துக் கொண்டே அவள் கரத்தை மெல்லப் பற்றப் போனான்!

"ம்......கையை விடுங்க! இத்தனை நாள் பொறுத்திருந்தீங்க; இன்னம் கொஞ்ச நேரந்தானே......!" என்றாள் அவள் சிரித்துக் கொண்டே.




நா று

ஒரு காட்டில் கரடியும் நரியும் ரொம்ப சிநேகமாக இருந்தன. ஒரு நாள் இரண்டும் ஒரு கிராமத்தின் வழியாகப் போய்க் கொண்டிருந்தன. அப்பொழுது ஒரு வீட்டிலிருந்து வடை சுடும் வாடை வந்து நரியின் மூக்கைத் துளைத்தது. உடனே நரிக்கு அதைச் சாப்பிட வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. அது உடனே விஷயத்தைக் கரடியாரிடம் தெரிவித்தது.

"எனக்கும்தான் ஆசையாயிருக்கிறது. ஆனால் அதை எப்படி எடுத்துச் சாப்பிட முடியும்?" என்று நாக்கில் ஜலம் சொட்டக் கரடி கேட்டது.

"ஒருவரும் வீட்டில் இல்லாத சமயத்தில் உள்ளே போய்த் திருடிச் சாப்பிட்டு விடலாமே!" என்று நரி யோசனை சொல்லிற்று.

"பலே யோசனை! வா, திருடலாம்!" என்று நரியும் கரடியும் அந்த வீட்டை நெருங்கி எட்டிப் பார்த்தன. அதிர்ஷ்டவசமாக அந்த வீட்டுக்குள் யாரையும் காணவில்லை. ஆகவே, அவை சந்தடி செய்யாமல் உள்ளே போய் வடைகளை எடுத்துச் சாப்பிட ஆரம்பித்தன. அந்தச் சமயம் பார்த்து வீட்டுக்குச் சொந்தக்காரரான யானையார், "யாரடா, திருட்டுப் பயல்கள்!" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார்.

அவ்வளவுதான்; கரடி விழுந்தடித்துக் கொண்டு ஓடியே போய்விட்டது. பாவம், நரி ஓடுவதற்குள் யானையார் அதைத் தன் துதிக்கையால் பிடித்துப் பூமியில் ஓங்கி ஓர் அடி அடித்து விரட்டி விட்டார்!

அவமானமடைந்த நரிக்குக் கோபங் கோபமாக வந்தது. "சமயத்தில் தன்னை விட்டுவிட்டு ஓடிப்போன அந்தப் போக்கிரிக் கரடிக்கு எப்படி புத்தி கற்பிக்கலாம்?" என்று அது தீவிரமாக யோசனை செய்து, கடைசியில் ஒரு தீர்மானத்துக்கும் வந்தது.

அதன்படி மறு நாள் இரவு நரி கரடியின் வீட்டுக்கு வழக்கம் போல் சென்று, "கரடி அண்ணே, கரடி அண்ணே! நேற்று நீ என்னை விட்டு விட்டு ஓடின பிறகு, நான் அந்த வழியாக வந்தேன். அங்கே ஒரு கிணற்றுக்குள் யாரோ பெரிய பெரிய வடைகளாகச் சுட்டு ஒளித்து வைத்திருந்தார்கள். வேண்டிய மட்டும் நான் சாப்பிட்டு விட்டேன். அப்போது நீ இல்லாதது எனக்கு ரொம்ப வருத்தமாக இருந்தது. ஆனாலும் உனக்காக அங்கேயே ஒரு பெரிய வடையை ஒளித்து வைத்துவிட்டு வந்திருக்கிறேன். இன்று நீ என்னுடன் வந்தால் அதை உனக்குக் காட்டுகிறேன்; நீ வராவிட்டால் நானே அதையும் எடுத்துச் சாப்பிட்டு விடுகிறேன்!" என்று கொஞ்சங்கூடச் சிரிக்காமல் சொல்லிற்று.

"அப்படியா, சங்கதி! கிளம்பு, கிளம்பு! அதைச் சாப்பிட்டால்தான் எனக்குத் தூக்கம் பிடிக்கும்!" என்று கரடி அவசரப்பட்டது.

இதுதான் சமயமென்று கரடியை அழைத்துக்கொண்டு நரி ஊருக்குக் கடைசியி லிருக்கும் ஒரு பாழுங் கிணற்றுக்குக் கூட்டிக் கொண்டு சென்றது.



"கரடி அண்ணே, கரடி அண்ணே! இதோ இருக்கிறது, பார்த்தாயா?" என்று நரி கிணற்றுக்குள் இருந்த சந்திர பிம்பத்தைக் கரடிக்குச் சுட்டிக் காட்டியது.

கரடியும் வடை சாப்பிடப்போகும் ஆத்திரத்தில், "நரி தம்பி, நரி தம்பி! நீதான் நிறைய வடை சாப்பிட்டாயே, இந்த ஒரு வடையையாவது எனக்கு எடுத்துத் தாயேன்!" என்றது.

"கரடி அண்ணே! நான் கீழே போய் அந்த வடையை எடுக்கும் போது மறுபடியும் எனக்கு அதைச் சாப்பிட வேண்டுமென்ற ஆசை வந்தாலும் வந்துவிடும். ஆகையால் இதோ இருக்கும் இந்தக் கயிற்றின் வழியாக நீயே கிணற்றுக்குள் இறங்கி அதை எடுத்துச் சாப்பிடு! நான் கயிற்றைக் கெட்டி யாகப் பிடித்து கொள்ளுகிறேன்!" என்று தன் கையி தயாராக வை இருந்த கயிற்றை ந கிணற்றுக்கு தொங்கவிட்டது.

கரடியும் அவச அவசரமாகக் கீ இறங்கியது. சமய பார்த்துக் கயிற்றை கை நழுவ விட் விட்டு, "பழிக்குப் பழி வாங்கி விட்டேன்!" என்று சிரித்து கொண்டே நரி வீட்டைப் பார்த்து ஓட்டம் பிடித்தது.

அப்போது பழைய யானையார் நல் வேளையாக அந்த வழியே வந்தார் அவர் கரடியைக் கிணற்றிலிருந் காப்பாற்றி, அன்று தன் வீட்டி திருடித் தின்ன குற்றத்திற்காகத் தன் துதிக்கையால் அதைப் பிடித்துப் பூமியில் ஓங்கி ஓர் அடி அடித்து விரட்டி விட்டார்!

"தப்பினோம், பிழைத்தோம்!" என்று கரடியும் தன் வீட்டை நோக்கி எடுத்தது ஓட்டம்!

---

## சர்க்கஸ் வித்தை!





# தீவிரமான குளிர் ஜுரம்

## ஸ்வாசப் பைக்கு நேரும் அபாயத்தை அறிவிக்கிறது



குளிர் ஜுரத்தினுல் ஸ்வாசக் குழாய் வேக்காடு, ஸ்வாசாசய வேக்காடு, நிமோனியா போன்ற கொடிய நோய்கள்கூட ஏற்படலாம். ஆகையால் கவனத்துடன் கிருமி நாசன ஸ்வாசகரண மாத்திரையான 'பெப்ஸ்' சாப்பிடுங்கள். பெப்ஸ் மாத்திரை வாயினுள் கரையும்போது உன்னத மருந்து சத்துக்கள் வெளியாகி ஸ்வாசத்தினுல் ஸ்வாசாசயத்திற்குக் கொண்டு போகப்படுவதால் ஸ்வாச மார்க்கத்திற்கு ஹிதமளிக்கிறது. ஸ்வாசக் குழாயின் மெல்லிய தோல்களிலுள்ள வேக்காடுகளை ஆற்றி, இருமலை நிறுத்தி, கிருமிகளை நாசமாக்குகிறது. இருமல், ஜலதோஷம், குளிர் ஜுரம், தொண்டைப் புண், முறை ஜுரம், மற்றும் மார்பு, ஸ்வாசாசய சம்பந்தப்பட்ட நோய்களுக்கு பெப்ஸ் ஒரு சிறந்த மருந்து.

# PEPS

## பெப்ஸ்

கிருமி நாசன ஸ்வாச மாத்திரைகள் சாப்பிடுங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்



எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்

ஏஜண்டுகள் :—மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி., மதராஸ்

No. 4



# சாப்பிட மிகவும் இனிமையானது

ருசிகரமான சாக்லேட்டின் வாசனையை ஒத்திருக்கும் ப்ரூக்லாக்ஸை குழந்தைகளும் வளர்ந்தவர்களும் விரும்புகிறார்கள். ப்ரூக்லாக்ஸ் வயிற்றில் கிளர்ச்சி ஏற்படுத்தாமல் மலச்சிக்கலுக்கு மூலஸ்தானமான குடலினுள் சென்று பாதையை நீக்கி உங்களுக்கு இரவு முழுவதும் அதிக ஆஸ்வாசமளிக்கிறது.

# ப்ரூக்லாக்ஸ்

சாக்லெட் லாக்ஸெடிவ்

டின் ஒன்றுக்கு அணா பத்து. எங்கும் கிடைக்கும்

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜெண்டுகள் :

ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி, 99-A, அரமனைக்காரத் தெரு, மதராஸ்

No. 4.

# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

ரமாநாத் பணத்தைப் பெட்டியில் வைப்பதற்காக உள்ளே போனதும், இரு கிழவர்களும் தங்களுக்குள் பேசிக்கொள்ள ஆரம்பித்தனர்:

"பார்த்தீர்களா?" என்றார் ரமேஷ்பாபு.

"நன்றாகப் பார்த்தேன்; என்ன செய்வது! நம் வீட்டுக்கே இந்தக் கிரஹசாரம் எல்லாம் வர ஆரம்பித்துவிட்டது! கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!" என்று நொந்து கொண்டார் தயாநாதபாபு.

"அப்படிச் சொல்லாதீர்கள். இந்தக் காலத்தில் இந்தமாதிரிப் பொம்மனாட்டிகள்தான் வேண்டும். காலைத் தலையை வலிக்கிறது என்றால் டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு வருவார்கள். கட்டின புருஷனுக்கு ஒத்தாசையாக இருப்பார்கள். நம் வீட்டுப் பொம்மனாட்டிகளுக்கு என்ன தெரியும்? வீட்டை விட்டு ஒரு அடி எடுத்து வைக்க மாட்டார்கள்; நமக்குப் பாரமாய்த்தான் இருப்பார்கள். இந்தமாதிரிப் பெண்களாயிருந்தால் எவ்வளவு சௌகரியம்! யோசித்துப் பாருங்கள்!" என்றார் ரமேஷ் பாபு.

"போதும், இந்த மோட்டு நாகரிகம்! என்ன வேண்டிக் கிடக்கிறது! பெற்ற மனம் கேட்கமாட்டேன் என்கிறது. இல்லாவிட்டால் 'அரை நாழிகைக்கு முன்னால் வீட்டை விட்டுப் போ!' என்று ரமாநாத்தைத் துரத்தியிருப்பேன். பெண்களுக்கு இடம் கொடுத்துத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடும் இந்த உதவாக்கரை ஆண் பிள்ளைகளைக் கண்டாலே எனக்குக் கோபம் கோபமாக வருகிறது. இந்த வக்கீல் சம்சாரம் இருக்கிறாளே, இவள் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் வக்கீலை ஏமாற்றிவிட்டு ஓடிவிடுவாள் என்று எனக்குத் தோன்றுகிறது. நான் சொல்லுகிறபடி நடக்கிறதா, இல்லையா பாருங்கள்!" என்றார் தயாநாத பாபு.

"நீங்கள் சொல்லுவதை நான் ஒத்துக்கொள்ள முடியாது. ஒரு பெண் வெளியில் வாசலில் போய்த் தன் காரியத்தைத் தானே கவனிக்கிறாள் என்றால் அவளுக்கு இந்தமாதிரியெல்லாம் கெட்ட பெயர் கட்டுவது நியாயமாகுமா? நீங்களே யோசித்துப் பாருங்கள். அதிருக்கட்டும்: அவன் ரமாநாத்தின் கையில் இப்பொழுது பணம் கொடுத்தானே, எதற்காகக் கொடுத்திருப்பான்?"

"என்ன 'கோல்மால்' வேலையோ? யார் கண்டது? அவன் அவளையும் ஏமாற்றிவிடப் போகிறான்!" என்றார் தயாநாதபாபு.

இதே சமயம் உள்ளேயிருந்து வெளியில் வந்த ரமாநாத்துக்கு அவருடைய கடைசி வாக்கியம் காதில் விழுந்தது. அவன் புருவத்தை நெரித்துக்கொண்டு, "ஆமாம், அவளை ஏமாற்றத்தான் பார்க்கிறேன். ஏனென்றால் பிறரை ஏமாற்றிப் பணம் பறிப்பதுதானே என்னுடைய தொழில்!" என்று சற்றுக் கடுமையுடனேயே சொன்னான்.

தயாநாதபாபு வெட்கித் தலை குனிந்தார். "எதற்காக இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறாய்? நான் என்ன, அப்படி வித்தியாசமாகச் சொல்லி விட்டேன்!" என்றார்.

"மோசக்காரன் என்று பட்டம் கட்டி விட்டீர்கள்! அதைவிட வேறென்ன வேண்டும்? உங்கள் மனதில் என்னைப் பற்றி

அப்படிச் சந்தேகம் உதிக்கத்தான் காரணம் என்ன? நான் அப்படி என்ன தப்பாக நடந்து கொண்டு விட்டேன்? நான் கொஞ்சம் நல்ல துணி உடுத்திக்கொண்டு, காலத்துக் கேற்றவாறு நாகரிகமாக நடக்கிறேனே! அது உங்களுக்குப் பிடிக்கவில்லையா? நான் கண்ணியமாகச் சம்பாதித்து மானமாகத்தான் வாழ விரும்புகிறேன். அப்படித்தான் இன்றுவரை செய்தும் வருகிறேன். ஏமாற்றும், மோசடியும் செய்து பணம் சம்பாதிக்க நேரிட்டு விட்டால், விஷத்தைத் தின்று உயிரை விடுவேனே தவிர, நாணயப் பொறுப்பை ஒருநாளும் விடமாட்டேன். இது சத்தியம். சிலருக்கு சிறக்கச் செலவு செய்யத் தெரிகிறது; சிலருக்குத் தெரிவதில்லை. நீங்கள் இதை மோசடி, சூது என்று எப்படி வேண்டுமானாலும் நினைத்துக்கொண்டு போங்கள், எனக்கு அதைப் பற்றி அக்கறை யில்லை. என்மேல் உங்களுக்கு இந்த மாதிரிச் சந்தேகம் விழுந்த பிறகு இந்த வீட்டில் இருந்தென்ன பிரயோசனம்? இதோ, ரமேஷ் பாபு இருக்கிறார்! என்னைப்பற்றி இவரிடம் என்ன வேண்டுமானாலும் கேளுங்கள். அவர் எனக்காகப் பொய் சொல்லுகிறவர் இல்லை" என்றான் ரமாநாத்.

உண்மை தொனிக்கும் அவனுடைய பேச்சைக் கேட்டபின் தயாநாத பாபுவுக்கு மனம் சிறிது நிம்மதி யுற்றது. "நீ வீட்டை விட்டு ஓடுவானேன்! அப்படி நீ மோசமாக நடந்து கொண்டாய் என்று தெரிந்தால், நான் எப்படித் தெருவில் தலை காட்ட முடியும்? நீ செய்யும் அதிகச் செலவைக் கண்டு சந்தேகப்பட்டேனே தவிர வேறொன்றும் இல்லை. 'நான் தவறி நடக்கவில்லை' என்று நீயே சொல்லும் பொழுது, நான் ஏன் வீண் சந்தேகப்படப் போகிறேன்? 'என் பிள்ளை எவ்வளவுதான் ஏழையாகப் போனாலும் சரி, நல்ல மார்க்கத்திலிருந்து தவறக் கூடாது' என்பதே என் அந்தரங்க அவா. கடவுள் உன்னை நியாயபுத்தி யுள்ளவனாகவும், நல்ல வழியில் புத்தி செல்லக் கூடியவனாகவும் வைக்க வேண்டும் என்பதே என் பிரார்த்தனை" என்றார் தயாநாத பாபு.

ரமேஷ்பாபு புன்முறுவலுடன், "அந்தக் கதையெல்லாம் அப்புறம் ஆகட்டும். அவள் உனக்கு இப்பொழுது எதற்காகப் பணம் கொடுத்தாள்?" என்று கேட்டார்.

"அவளை ஏமாற்றிப் பிடுங்கிக்கொண்டு வந்திருக்கிறேன்!" என்றான் ரமாநாத்.

"என்னிடம் அந்த விளையாட்டுப் பேச்செல்லாம் வேண்டாம். உண்மையைச் சொல்லு. நீ பணம் சம்பாதிப்பதில் எனக்கு ஆட்சேபனை யொன்றும் இல்லை. ஆனால் மரியாதைக்குப் பங்கம் விளையக் கூடாது. உனக்கு ஏதாவது தாரு கிடைத்தால் என்னையும் சேர்த்துக் கொள். மறந்து விடாதே!" என்றார் ரமேஷ் பாபு.

"கல்லிழைத்த கங்கணம் அவளுக்கு வேண்டுமாம்."

"அப்படியானால், வா! நானே ஒரு நல்ல தட்டானை விட்டுச் செய்து தரச் சொல்லுகிறேன். ஆமாம், எதற்காக நீ இந்தத் தொல்லையை யெல்லாம் விலைக்கு வாங்கிக் கொண்டாய்? இந்தப் பொம்மனாட்டிகளின் சுபாவமே உனக்குத் தெரியாது போலிருக்கிறது. இவர்கள் யாரையுமே நம்ப மாட்டார்கள். நீ அதிகப்படியாகவே நாலைந்து ரூபாய் இவர்களுக்காகச் செலவு செய்தாலும் சரி, நீ அவர்களை ஏமாற்றிவிட்டதாகத் தான் எண்ணுவார்கள். இந்தப் பெண் பிள்ளைகளிடத்தில் நல்ல பெயர் வாங்குவது ரொம்ப சிரமம். கெட்ட பெயர் வாங்குவது வெகு சுலபம்!" என்றார் ரமேஷ்பாபு.

"நீங்கள் சொல்லுவது படிக்காத பெண்கள் விஷயத்தில் உண்மையாக இருக்கலாம். படித்த பெண்கள் அப்படி யெல்லாம் இருக்கமாட்டார்கள்!" என்றான் ரமாநாத்.

பிறகு சிறிது நேரத்துக் கெல்லாம் அவன் எழுந்து உள்ளே பத்மாவிடம் போய், "உன் தோழி ரத்தன் வந்திருந்தாள்!" என்றான்.

"நிஜமாகவா? 'பார்ட்டி'க்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் சரிவர நடக்காமல் ஒரே களேபரமாக இருக்கிறதே! அதை யெல்லாம் அவள் பார்த்திருப்பாளே!"

"நம்மைப் பிடித்த நல்ல காலம், அவள் உள்ளே வரவில்லை. கங்கணத்துக்காகப் பணம் கொடுக்க வந்திருந்தாள். நீ எண்ணூறு என்று சொல்லி யிருந்தாயாம். நான் அறுநூறுதான் வாங்கிக் கொண்டேன்."

பத்மா சிறிது வெட்கிப் போய், "நான் வேடிக்கைக்காக அப்படிச் சொன்னேன்!" என்றாள்.

பத்மா பேச்சுக்கு அப்படிச் சொல்லி விட்டாளே தவிர, அவளுடைய மனம் ஓசையடியாகக் குழம்பிக் கொண்டிருந்தது. ரமாநாத் எண்ணூறு ரூபாயை வாங்கிக்

கொண்டிருந்தால் அவளுடைய மனம் இவ்வளவு குழப்பமுற்றிராது. ஒரு வேளை தனக்குக் கிட்டிய வெற்றியை எண்ணி மனம் பூரித்திருப்பாள். ரமாகாந் செய்த விவேகம் ததும்பிய காரியம், அவளுடைய தரும புத்தியைத் தட்டி எழுப்பி விட்டது.

'நாம் ஏன் வீணாகப் பொய் சொன்னோம்! அவன் மனத்துக்குள் என்னைப் பற்றி என்ன எண்ணுவான்! என்னை ஒரு பெரிய மோசக்காரி என்று அவன் எண்ணி விட்டால் என்ன செய்வது?' என்று அவள் மனம் புழுங்கினாள்.

## பதினாறாம் அத்தியாயம்

## — கங்கு கை விரித்தான்! —

நேற்று விருந்தில் ஒன்றும் விசேஷ சம்பவம் நடக்கவில்லை. ரத்தனுடன் அவளுடைய ஒன்றுவிட்ட சகோதரி ஒருத்தி மட்டும் வந்திருந்தாள். வக்கீல் வரவில்லை. தயாநாத பாபு அந்தச் சமயம் வீட்டில் இல்லாமலிருப்பதுதான் நல்லது என்று எண்ணி எங்கேயோ வெளியே போய் விட்டார். ரமேஷ்பாபு மட்டும் வராந்தாவிலேயே கால் கடுக்க நின்றுகொண்டிருந்தார். ரமாகாந் அவரையும் விருந்தில் சேர்த்துக் கொள்ள எவ்வளவோ முயன்றான். ஆனால் அந்த விருந்தில் கலந்து கொள்ள அவருடைய மனம் சிறிதும் துணியவில்லை.

பத்மா வந்திருந்த விருந்தாளிகளைத் தன் மாமியாருக்கு அறிமுகம் செய்து வைத்தாள். அந்த யுவதிகள் கூச்சத்தை விட்டுத் 'தடதட'வென்று பூமி அதிர நடப்பதையும், மாடிக்கும் கீழுக்கும் வளைய வளைய வருவதையும், நாலு பேர் காதில் விழும்படியாகக் 'கலகல'வென்று உரக்கச் சிரிப்பதையும் காண, பத்மாவின் மாமியாருக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. சின்னப் பெண்களாக, லட்சணமாக, நாணத்துடனும் அச்சத்துடனும், அடக்க ஒடுக்கமாக அவர்கள் இருக்க வேண்டும் என்பது அவளுடைய அபிப்பிராயம். இன்று பத்மாவும் அடக்க ஒடுக்கத்தை விட்டு, அவர்களுடன் சேர்ந்து கொண்டு கொம்மாளம் அடிப்பதைக் காணும்பொழுது அவளுக்கு இன்னும் அதிக ஆச்சரியமாய்ப் போய் விட்டது. ரத்தன் அன்று கங்கணத்தைப் பற்றியே பேச்சு எடுக்கவில்லை.

விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளில் மூழ்கியிருந்ததனால் ரமாகாந்துக்குக் கங்காராமின் கடை வரைக்கும் போய்வரப் பொழுதே கிடைக்கவில்லை. 'ரத்தன் கொடுத்த அறுநூறு ரூபாயையும் கொண்டுபோய்க் கங்காராமிடம் கொடுத்துப் பழையகணக்கில் வரவு வைத்துக்கொள்ளச் சொல்லிவிட்டு, ஒரு கங்கணத்துக்கு 'ஆர்டர்' கொடுத்தால் தனக்கும் மதிப்பாக இருக்கும், கங்குவும் திருப்தி யடைவான்' என்று அவன் மனத்துள் திட்டமிட்டுக் கொண்டிருந்தான்.

மறுநாள் ரமாகாந் மலர்ந்த முகத்துடன் கங்காராமின் கடையை அடைந்து வெகு மிடுக்குடன், "என்ன சேதி, கங்கு? சௌக்கியமா? புது மோஸ்தரில் ஏதாவது நகை வந்திருக்கிறதா? வியாபாரம் எல்லாம் எப்படி நடந்துகொண்டிருக்கிறது?" என்று விசாரித்தான்.

ரமாகாந் இவ்வளவு நாட்களாகப் பணமே கொடுக்காமல் அயரப் போட்டுவிட்டதனால் கங்காராமின் பேச்சில் பழைய உற்சாகம் தொனிக்கவில்லை; குறை கூறும் தோரணை தான் காணப்பட்டது.

"கடை யென்றால் வியாபாரம் நடக்காமல் இருக்குமா? எத்தனையோ நகைகள் வந்து விற்றுப் போய்விட்டன. நீங்கள் இந்தப் பக்கம் என்றைக்காவது தலை காட்டினால்தானே! உங்களைப்போன்ற ஆசாமிகளிடம் நாங்கள் வியாபாரம் செய்தால் உருப்பட்டாற்போலத்தான்! நீங்கள் நகை வாங்கிக் கொண்டு போய் எட்டு மாதத்துக்கு மேல் ஆகிறது. உங்களிடமிருந்து ஒரு தம்பிடியாவது கழன்றால்தானே!" என்று ஒருவிதச் சலிப்புடன் கூறினான் கங்காராம்.

"என்ன, கங்கு? எல்லாரையும் போல என்னையும் இப்படி மோசமாக நினைத்து விட்டாயே! பணத்துடன்தான் உன் கடைக்குள் நுழைவது என்றிருந்தேன். இந்தா, இந்த அறுநூறு ரூபாயை வரவு வைத்துக் கொள்ளு. நல்ல கங்கணமாக ஒன்று செய்து கொடு" என்று சொல்லி ரமாகாந், அறுநூறு ரூபாயைக் கங்காராமின் கையில் கொடுத்தான்.

கங்காராம் அந்த அறநூறு ரூபாயையும் வாங்கிப் பெட்டியில் வைத்துக் கொண்டு, "சரி, பாக்கி ரூபாய் எப்பொழுது கிடைக்கும்?" என்று கேட்டான்.

"கூடிய சீக்கிரம் தந்து விடுகிறேன்."

"ஆமாம் முதலாளி, பழைய பாக்கியைச் 'சட்புட்' என்று தீர்த்து விடுங்கள்" என்றான் கங்காராம்.

கங்கணம் செய்து தருவதாகக் கங்காராம் வாக்களித்தானே தவிர, செய்து கொடுக்கவே யில்லை. ஒரு தடவை வியாபாரம் செய்வதற்குள்ளேயேதான், 'இந்த இடத்திலிருந்து பணம் சீக்கிரமாகக் கிளம்பாது!' என்று அவன் தெரிந்துகொண்டு விட்டானே! அப்புறம் கங்கணம் செய்து கொடுக்க, அவனுக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

ரமாநாத் கங்கணம் வாங்கிப் போவதற்காகக் கங்காராமின் கடைக்கு வராத நாளே கிடையாது. ஆனால் கங்காராமோ, தகுந்த 'சால்சாப்பு'க்கள் சொல்லி அவனை அலைக்கழிக்கலானான். இதுமாதிரி ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டது. ஆனால் கங்கணம் செய்து முடிந்தபாடில்லை. 'ரத்தன் கங்கணத்துக்காகத் தன்னைத் தொந்தரவு செய்ய வந்து விடுவாளோ!' என்ற பயத்தில் ரமாநாத் 'பார்க்' பக்கம் போவதைக்கூட நிறுத்திக் கொண்டு விட்டான். ஆனாலும் என்ன, ரத்தனுக்குத் தான் அவனுடைய வீடு தெரியுமே! ஆகவே அவள் அநேக !தடவைகள் கங்கணத்தைப் பற்றிக் கேட்பதற்காக அவனுடைய வீட்டுக்கே வந்து விட்டாள். கடைசியில் ஒரு நாள் அவள் அலுத்துச் சலித்துப் போய், "அந்த நாய் செய்து கொடுக்க வில்லையென்றால், வேறு எவனிடமாவது கொடுப்பதுதானே!" என்று ரமாநாத்திடம் கேட்டாள்.

"என்ன சொல்லுவது, போங்கள்! அந்தப் பயல் என்னை ஏமாற்றி விட்டான். எப்பொழுது போனாலும், 'இன்றைக்கு, நாளைக்கு' என்று தட்டிக் கழிக்கிறான். அந்தப் பயலிடம் கொண்டு போய் முட்டாள்தனமாக முன் பணம் கொடுத்து விட்டேன்! முள்வேலியில் சேலையைப் போட்டபின் மெல்லத்தானே எடுத்து ஆக வேண்டும்! அதுதான் யோசிக்கிறேன்" என்றான் சமாநாத்.

"நீங்கள் எனக்கு அவனுடைய கடையை மட்டும் காட்டுங்கள், போதும். அவன் அப்பனுக்கு ஒரு லாய் அழுதுகொண்டு பணத்தைக் கக்கும்படி செய்கிறேன்! இந்த மாதிரி அயோக்கியப் பயல்களைப் போலீஸிலே பிடித்துக் கொடுத்தால் கூட தோஷம் இல்லை!" என்றாள் ரத்தன்.

"ஆமாம், இந்தமாதிரி ஆளை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். தட்டான்களுக்கே தட்டிக் கழிக்கிற சுபாவம் உண்டு தான். இருந்தாலும், இவனைப் போல், பணத்தை வாங்கி ஏப்பம் விட்டுவிட்டு, இப்படி அழிச்சாட்டியம் செய்யும் தட்டானை நான் என் ஜன்மத்திலே கண்டதில்லை" என்றாள் பத்மா.

சமாநாத் தலையைச் சொறிந்துகொண்டு, "நீங்கள் இன்னும் பத்தே பத்து நாள் எண்ணிப் பொறுத்துக் கொள்ளுங்கள். நான் எப்படியாவது மெதுவாக அவனிடமிருந்து பணத்தை வாங்கி, வேறொரு கடைக்காரனிடம் கொடுத்தாவது செய்து தரச் சொல்லுகிறேன்" என்றான்.

"எனக்கு ஏன் அந்தப் போக்கிரியின் கடையைக் காட்ட மாட்டேன் என்கிறீர்கள்? நீங்கள் மட்டும் காட்டுங்கள்; நான் அவனைப் படாத பாடு படுத்தி வைக்கிறேன்!" என்றாள் ரத்தன்.

"அதுதான் நான் சொல்லுகிறேனே, இன்னும் பத்தே நாளில் உங்களுக்குக் கங்கணம் கிடைத்துவிட்டால் சரிதானே!"

"அவன் குழைந்து குழைந்து பேசுவதைக் கண்டு மயங்கி, நீங்கள் தான் அவ-



வக்கீல் :— நான் மட்டும் அவன் கேஸை நடத்தாவிட்டால் கட்டாயம் அவனைப் பத்து வருஷம் ஜெயிலில் போட்டிருப்பார்கள்!

நண்பர் :— அப்படியானால் இப்பொழுது என்ன செய்தார்கள்?

வக்கீல் :— தூக்குப் போட்டு விட்டார்கள்!

னுக்கு இவ்வளவு இடம் கொடுத்து விட்டீர்களோ என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தமாதிரி ஆசாமிகளிடத்தில் எல்லாம் கொஞ்சம் 'கெடுபிடி'யாக இருந்தால்தான் நம் காரியம் நடக்கும்! இல்லாவிட்டால் நம் தலை மேல் ஏறி உட்கார்ந்து விடுவார்கள்!" என்றான் ரத்தன்.

ரமாநாத்துக்கு ரத்தன் அங்கிருந்து எப்படியாவது நகர்ந்தால் போதும் என்றாகி விட்டது. கங்காராம் அன்றைக்கே "முன் பணமாகப் பாதி ரூபாயாவது கொடுத்தால்தான் கங்கணம் செய்து தர முடியும். அது மட்டும் இல்லை; பழைய பாக்கியும் ஒரு பைசா பாக்கி இல்லாமல் தீர்த்து விட வேண்டும்" என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டான்.

அவனுடைய வார்த்தைகளைக் கேட்ட ரமாநாத்துக்குத் தலை சுழன்றது. "கங்கு, இது நியாயம் இல்லை. ஒரு பெண்பிள்ளை கொடுத்த பணம் அது. அவள் முகத்தில் நான் எப்படி விழிப்பது? நீயே சொல்லு. உன் பணத்துக்கு என்னிடமிருந்து 'புரோ நோட்டு' வேண்டுமானாலும் எழுதி வாங்கிக் கொள்ளு" என்று ரமாநாத் எவ்வளவோ மன்றாடிப் பார்த்தான்.




கங்காராம் எதற்கும் செவி சாய்ப்பதாகப் படவில்லை. "உங்களிடம் 'புரோ நோட்டு' எழுதி வாங்கிக் கொண்டு, நான் என்ன, நாக்கில் விரலை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதா? ஒரு மாதம் இரண்டு மாதம் என்றால் பரவாயில்லை. எட்டு மாதம், பத்து மாதம் என்று உங்களைப் போலிருந்தால் நமக்கெல்லாம் கட்டாது, ஸ்வாமி! நீங்களோ பெரிய மனிதர்; உங்களுக்கு இந்த ஐந்நூறுக்கும் அறுநூறுக்கும் என்ன பிரமாதம்? நாங்கள் இந்தச் சின்ன முதலைக் கொண்டு புரட்டித்தானே வியாபாரம் செய்தாக வேண்டும்! கங்கணம் இப்பொழுதே வேண்டுமானாலும் ரெடி! நீங்கள் பணத்தைக் கொடுத்துவிட்டு எப்பொழுது வேண்டுமானாலும் வந்து எடுத்துப் போங்கள். எனக்கு ஆட்சேபணையில்லை" என்று சொல்லி விட்டான்.

ரமாநாத் பல்லைக் கடித்துக் கொண்டு, "இப்படியெல்லாம் நீ சொல்லுவாய் என்று தெரிந்திருந்தால், அப்பொழுதே உன் பணத்துக்கு ஏதாவது ஒரு ஏற்பாடு செய்துவிட்டு மறு காரியம் பார்த்திருப்பேன்!" என்றான்.

"உங்களுக்கு எங்கள் முடை தெரியாததில்லையே! எதற்காக இப்படிக் கடுகடுப்பாகப் பேசுகிறீர்கள்?" என்றான் கங்காராம்.

ரமாகாந்த் கடையில் நம்பிக்கை யிழந்து வீடு திரும்பினான். இந்தச் சமயத்திலாவது அவன் தன் சகல விருத்தாந்தங்களையும் பத்மாவிடம் சொல்லியிருந்தால், அவள் எவ்வளவு மனத் துயரம் ஏற்பட்டாலும் அதை அடக்கிக் கொண்டு, தன்னுடைய கங்கணத்தையாவது கழற்றிக் கொடுத்திருப்பாள். ஆனால் ரமாகாந்துக்கு அவ்வளவு தைரியம் ஏற்படவில்லை. அவன் தன் பொருளாதார சிரமத்தைச் சொல்லி, அவளுடைய மனத்தைப் புண்படுத்த விரும்பவேயில்லை.

ரமாகாந்துக்கு மாதம் நூறு ரூபாய்க்குக் குறையாமல் கிடைத்து வந்தது என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. அவனுக்குச் சிக்கனமாக மட்டும் செலவு செய்யத் தெரிந்திருந்தால், அவன் இந்த எட்டு மாத காலத்துக்குள் பாதிக் கடனைத் தீர்த்திருக்க மாட்டானா? அவனுக்கு மேல் வரும்படிக்குத் தகுந்த மேல் செலவும் இருந்து கொண்டேதான் இருந்தது. வரும் பணம் எல்லாம் எப்படியோ கரைந்து கொண்டுதான் இருந்தது. 'இப்படியேயா நாம் இருந்துவிடப் போகிறோம்? ஒரே தவணையில் கடனைத் தீர்த்துவிடக் கூடிய காலம் நமக்கு வாராமலேயா இருந்துவிடப் போகிறது?' என்ற நம்பிக்கையில் அவன் தன் நாட்களை ஓட்டி வந்தான். தம்பிடியை ரூபாயாக ஆக்கும் சாமர்த்தியம் வியாபாரிகளுக்கு உண்டு; ஆனால் இந்தக் குமாஸ்தாக்களுக்கோ ரூபாயைத் தம்பிடியாக ஆக்கத்தானே தெரியும்!

கொஞ்சம் இருட்டியதும் ரமாகாந்த் மறுபடியும் ஒரு தடவை நகைக் கடைகளை ஒரு சுற்றுச் சுற்றினான். எந்த நகைக் கடைக்காரனிடமாவது, 'கடனாக வாங்கி விடலாம்' என்று எண்ணிக் கடைத் தெருவையே சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்து விட்டான். ஆனால் அவன் ஜம்பம் எங்கும் சாயவில்லை. ஏனென்றால், கடைத் தெருவில்தான் கம்பியில்லாத் தந்தி மூலம் செய்திகள் பரவி விடுகின்றனவே!

* * *

ரமாகாந்துக்கு இரவு பூராவும் தூக்கமே வரவில்லை. இந்தச் சமயம் யாராவது அவனிடத்தில் ஆயிரத்துக்கு 'நோட்டு' எழுதி வாங்கிக்கொண்டு 'ஐந்நூறுதான் தருவேன்' என்று சொல்லியிருந்தால்கூட அவன் சம்மதித்திருப்பான். அவனோ தனக்குத் தெரிந்தவர்கள் எல்லாரிடத்திலும் தன்னைப் பற்றிப் பெருமையாகச் சொல்லி வைத்திருந்தான்! யாரிடத்தில் போய்ப் பணம் கேட்பது?

இவ்வாறு ரமாகாந்த் கவலையில் ஆழ்ந்து மனதைப் போட்டு உழற்றிய வண்ணம், படுக்கையில் இப்படியும் அப்படியுமாகப் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தான். அகஸ்மாத்தாக அந்தச் சமயம் பத்மா விழித்துக் கொண்டாள். ரமாகாந்த் 'சடக்'கெனப் போர்வையை இழுத்துப் போர்த்திக்கொண்டு, நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருப்பவனைப் போலப் பாசாங்கு செய்யலானான். பத்மா மெதுவாகப் போர்வையை நீக்கி அவனுடைய முகத்தை உற்று நோக்கினாள். விழிப்புக்கும் உறக்கத்துக்கும் உள்ள வித்தியாசம் அவளுக்குத் தெரியாத தல்லவே! அவள் அவனுடைய பொய்த் தூக்கத்தைத் தெரிந்து கொண்டு மெதுவாக அவன் தேகத்தைத் தொட்டு அசைத்தவண்ணம், "இன்னுமா விழித்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"இன்றைக்கு ஏனோ தெரியவில்லை; தூக்கமே வர மாட்டேன் என்கிறது!"

"தூக்கம் வராத காரணம் எனக்குத் தெரியும். ஏதோ கவலை உங்களுக்கு. என்னிடம் கூடச் சொல்லக்கூடாது என்று அதை மறைக்கிறீர்கள். ஆமாம், நகைக் கடைக்காரர்களுக்கெல்லாம் சரியாகப் பணம் கொடுத்துக் கொண்டு வருகிறீர்களோ இல்லையோ? இன்னும் அவர்களுக்கு கொடுக்க வேண்டிய பாக்கி எவ்வளவு இருக்கும்?"

"எழுநூறுக்குள்தானிருக்கும்."

"ஆமாம், நான் கேட்கிறேனே என்று கோபித்துக் கொள்ளக் கூடாது. நீங்கள் கொடுத்திருந்த பணத்தை எடுத்துக் கடன்காரர்களுக்குக் கொடுத்துவிடவில்லையே!" என்று கேட்டாள் பத்மா.

'இந்தக் கேள்வியைப் பத்மா கேட்டு விடாமல் இருக்க வேண்டுமே!' என்று ரமாகாந்த் மிகவும் பயந்துகொண்டிருந்தான். அவன் பயந்தது சரியாகி விட்டது. பத்மா அதே கேள்வியைக் கேட்டு விட்டாள். அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. இந்தச் சமயத்திலாவது அவன் தன் உண்மை நிலையைப் பத்மாவிடம் சொல்லியிருந்தால் இந்தச் சங்கடத்திலிருந்து தப்பியிருக்கலாம். பத்மா எப்படியாவது விஷயத்தை முற்ற விடாமல் சமாளித்திருப்பாள். ஆனால் அவனுடைய தன் மதிப்பு அதற்குச் சிற்

தும் இடம் கொடுக்கவில்லை. ஆகவே, அவன் பத்மாவை விழுங்கி விடுபவன்போலப் பார்த்தவாறு, "ரத்தனுடைய பணம் எனக்கு எதற்கு? அவன பணத்தை எனது உபயோகத்துக்கு எடுத்துக் கொள்ள என்னை என்ன அவ்வளவு முட்டாள் என்று எண்ணிவிட்டாயா? நான் வாய் திறந்து கேட்டால், இரண்டாயிரம் மூவாயிரம் வேண்டுமானாலும் வந்து குவியும்பொழுது அவனுடைய பணத்தைத் தொட எனக்கு என்ன, பைத்தியமா பிடித்திருக்கிறது?" என்றான்.

"எதற்காக என்மேல் இப்படி எரிந்து விழுகிறீர்கள்? நான் உங்களை அப்படி என்ன குற்றமாகச் சொல்லி விட்டேன்!" என்று கேட்டாள் பத்மா.

பிறகு ஒருவரும் வாய் திறந்து பேசவில்லை. சிறிது நேரத்துக் கெல்லாம் பத்மா தூங்கிவிட்டாள். ஆனால் ரமாநாத்தோ இரவு பூராவும் 'பணத்துக்கு என்ன செய்வது?' என்று புரியாமல் தன் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருந்தான்.

மறுநாள் காலை ரமாநாத் எழுந்ததும் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு, 'ஆபீஸுக்குப் போய் உட்கார்ந்து ஆற அமர யோசித்தால் ஏதாவது ஒரு வழி புலப்பட்டு விடும்!' என்ற எண்ணத்துடன் ஆபீஸுக்குப் புறப்பட்டான். 'வியாதி குணம் அடைகிறதோ இல்லையோ, டாக்டரிடம் கொண்டு போய்க் காட்டினால் நல்லதல்லவா?' என்று எண்ணும் நோயாளியின் நிலையைப் போன்றிருந்தது, அவனுடைய நிலைமை!

ஆபீஸில் காவல்காரர்களைத் தவிர வேறு யாரும் இல்லை. ரமாநாத் தன் ரிஜிஸ்தரைத் திறந்து வைத்துக் கொண்டு கணக்குப் பார்க்கலானான். வெகு நாட்களாகவே அவனுடைய கணக்கில் மொத்தம் கூட்டிப் போடாமல் இருந்தது. ஆனால் ஹெட் கிளார்க்கு மட்டும் கையெழுத்துப் போட்டு விட்டார். மொத்தம் கூட்டிப் பார்த்ததில் இரண்டாயிரத்து ஐந்நூறு வந்தது. திடீரென அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. 'இரண்டாயிரத்து ஐந்நூறுக்குப் பதிலாக இரண்டாயிரம் என்று போட்டுவிட்டால் என்ன? யார் சிது புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு ஒவ்வொன்றாய்ப் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறார்கள்? அப்படியே பார்த்துத் திருட்டைக் கண்டு பிடித்துவிட்டால் கூட்டும் பொழுது தவறு ஏற்பட்டு விட்டது என்று சொல்லிவிட்டால் போயிற்று! அப்பொழுது நம்மை யார் என்ன செய்யக் கிடக்கிறது!' என்று அவன் மனத்துள் சிந்தித்தான். ஆனால் அவனுடைய மனம் அப்படிப்பட்ட காரியம் செய்ய இடம் கொடுக்கவில்லை. மறுபடியும் மனம் மாறிவிடாமல் இருக்க வேண்டுமே என்பதற்காகப் பென்ஸிலால் அந்த எண்களை அழுத்தமாக எழுதிவிட்டு, ரிஜிஸ்தரை எடுத்து டிராயரில் வைத்தான். பிறகு இங்கும் அங்கும் உலாவலானான்.

இதே சமயம் இரண்டொரு வண்டிகள் வர ஆரம்பித்துவிட்டன. ரமாநாத் அங்கே நின்று கொண்டிருப்பதைக் கண்ட வண்டிக்காரர்கள் 'சீக்கிரமாகச் சுங்கத்தைக் கட்டிவிட்டுப் போய்விடலாம்' என்ற எண்ணத்தில் அவனை அணுகினர். அவனும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு, வழக்கத்தைவிட இரண்டு பங்கு அதிகமாகக் கைக் கூலி கேட்டான். வண்டிக்காரர்களும் அவன் கேட்ட தொகையைச் சந்தோஷத்துடன் அளித்துவிட்டார்கள். ஏனென்றால், 'மண்டி'யில் வியாபார நேரம் இதுதான். இங்கிருந்து 'சுங்கம்' செலுத்திவிட்டு ஒரு மணி அல்லது இரண்டு மணிக்குத்தான் போக முடியும். அதற்குள் 'மண்டி' மூடியாகிவிடும். அப்புறம் அவர்கள் மறுநாள் 'மண்டி' நேரம் வரைக் காத்துக் கொண்டிருக்கவும் நேர்ந்துவிடும். அது மட்டும் அல்ல; சாமான் விலை கொஞ்சம் இறங்கிவிட்டால்கூட, அவர்களுக்கு நூற்றுக் கணக்காக நஷ்டம் ஏற்பட்டுவிடலாம். இங்கே ஐந்து பத்து இப்படிச் செலவு செய்து விடுவதனால் அவர்களுக்கு லாபமே தவிர நஷ்டம் ஒன்றும் இல்லை. ரமாநாத்துக்கு இந்த விஷயம் இன்றுதான் புரிந்தது. 'தினம் நான் காலை வேளையில் வீட்டில் சும்மாத்தானே உட்கார்ந்திருக்கிறேன், இங்கு உட்கார்ந்தால் ஐந்து பத்து ரூபாய் கைக்குக் கிடைக்குமே! தினம் இப்படி ஏதாவது கிடைத்தால் ஐந்தாறு மாதத்துக்குள் இந்தக் கடன் தொல்லையிலிருந்து விடுபட்டு விடலாமே!' என்று அவன் மனத்துள் திட்டம் போட்டுக் கொண்டான். பிறகு மேஜை 'டிராய'ரிலிருந்து ரிஜிஸ்தரை எடுத்து வைத்துக்கொண்டு கணக்குப் பார்க்கலானான். இன்று தனக்கு வந்த வரும்படியை நினைத்தபொழுது, அவனுக்கு ரிஜிஸ்தரில் தான் முதலில் எண்ணிய அந்தச் சிறிய மாறுதலைச் செய்வது அவ்வளவு பயங்கரச் செயலாகப் படவில்லை. புதி

தாகச் சேனையில் சேர்ந்த சிப்பாய் முதன் முதலில் துப்பாக்கிச் சத்தத்தைக் கேட்டா லுமே நடுங்குகிறான்; ஆனால் அவன் பழகப் பழகக் குண்டுமாரிக்குக்கூட அஞ்சுவ தில்லை.

ரமாநாத் தன் ஆபீஸை மூடிவிட்டு வீட் டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் சம யத்தில் ஒரு வெளியூர் வியாபாரி தன் வண்டியுடன் அங்கே வந்து சேர்ந்தான். ரமாநாத் 'நான் சாப்பிட்டுவிட்டு வந்த பின்தான் 'சுங்கம்' வாங்கிக் கொள்ள முடியும்' என்றான். ஆனால் வியா பாரிக்கோ முக்கியமான அலுவல் இருந் தது. அவன் ரமாநாத்தின் காலில் விழுந்து கெஞ்சிக் கூத்தாடி பத்து ரூபாய் தருவதாகச் சொல்லித் தன் காரியத் தைச் சாதித்துக் கொண்டான். ரமாநாத் சுங்கப் பணத்தை வாங்கித் தன் சட்டைப் பையில் போட்டுக் கொண்டான். இரண்டு, இரண்டரை மணி நேரத்துக்குள் இருபத் தைந்து ரூபாய் கிடைத்த சந்தோஷத்தில் அவன் வீட்டுக்குச் சாப்பிடப் போவதையே மறந்து விட்டான். 'ஒரு மாதம் சேர்ந்தாற் போல இந்த மாதிரி வரும்படி வந்தால் நாம் கடைத்தேறி விடலாம். ரத்னாவுக்குச் சால்சாப்புச் சொல்ல வேண்டிய அவசியம் நேரிடாது' என்ற நம்பிக்கை அவனுக்கு மகிழ்ச்சியை அளித்தது. 'ஹோட்டலி லிருந்து ஏதாவது வாங்கித் தின்னலாம் என்றால் ரூபாயை அல்லவா மாற்ற வேண்டி யிருக்கிறது!' என்று எண்ணி அன்றைக்கு அவன் வயிற்றையும் வாயையும் கட்டிப் போட்டான்!

அன்றைக்கு அவன் வெகு நேரம் வரை வேலை செய்தான். அவன் அங்கிருந்த நேரத்துக்குள் இன்னும் நாலைந்து ரூபாய்கள் சேர்ந்தன. அவன் தன் வேலை களை முடித்துக் கொண்டு வீட்டுக்குப் புறப் படும்பொழுது விளக்கேற்றும் நேரமாகி விட்டது. அன்றுதான் அவனுக்குத் தன் மனதிலிருந்த கவலையும் சுமையும் குறைந் தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது! 'இன்றைப் பொழுதைப் போலவே இன்னும் பத்து நாள் பொழுது போய் விட்டால், இந்த ரத்னாவின் தொணதொணப்பி லிருந்து தப்பி விடலாம்' என்று தனக்குள் அவன் வாய்விட்டுக் கூறிக் கொண்டான்.

(தொடரும்)

# பாணிக்கிரகணம்

சாரங்கனும் கிருஷ்ணகுமாரியும் அன்று வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"ரயிலைக் கவிழ்ப்பதிலும், பாலத்தை உடைப்பதிலும் கண்ட பலன் என்ன? நம் ஜனங்கள்தானே விழுந்து மடிகிறார்கள்?" என்று சாரங்கன் சொன்னபோது, அவன் குரலில் கோபம் தொனித்தது.

"இதற்கெல்லாம் நாம் பச்சாத்தாபப்பட்டு முடியுமா? பெரிய ஆறு வெட்ட வேண்டுமானால் ஓரிரண்டு வீடுகளை இடிக்க வேண்டி வரும்; வயல்களைத் தோண்டும்படி நேரும். முடிவில் நன்மைதானே உண்டாகப் போகிறது?" என்றாள் கிருஷ்ணகுமாரி.

* * *

*சென்ற 1942-ம் ஆண்டில் இந்தியாவின் சுதந்திரத்துக்காக இறுதிப் போர் நடந்தது. அந்தப் போரில் வீர இளைஞர் பலர் 'அண்டர் கிரௌண்ட்' இயக்கம் என்று சொல்லப்படும் இரகசிய பயங்கரச் செயல்களில் ஈடுபட்டனர். மேற்படி இயக்கத்தை அடிப்படையாகக் கொண்ட "பாணிக்கிரகணம்" என்னும் புதுத்தான தொடர்கதை "கலகி"யில் சீக்கிரம் ஆரம்பமாகப் போகிறது.*

*கதையை எழுதியவர் ஒரு பிரபல ஆங்கில தினப்பத்திரிகையின் உதவி ஆசிரியர்.*




## கெட்ட பையன்கள்!

தாயார்:—அடே, நீ அந்தப் பையன்களுடன் சண்டை போட்டபோது என்ன வார்த்தை உபயோகித்தாய்? இனிமேல் அந்த வார்த்தையை உபயோகிக்கக் கூடாது.

மகன் :— கம்பனும் அதிவீர ராமபாண்டியனும் கூட அந்த வார்த்தையை உபயோகித்திருக்கிறார்களே!

தாயார் :— அப்படியானால் அந்தக் கெட்ட பையன்களின் சகவாசத்தை விட்டுவிடு!

●

## புத்திசாலி!

உபாத்தியாயர் :—அசோகர் காலத்திய கல்வெட்டுகள் முக்கியமாக நமக்கு எதை அறிவிக்கின்றன?

பையன் :—அந்தக் காலத்திலும் காகிதப் பஞ்சம் உண்டு என்பதைத்தான்!

●

## நல்ல வியாபாரம்!

"இந்த வியாபாரம் மந்தமான காலத்தில் என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

"மேஜை நாற்காலி விற்றுக் கொண்டிருக்கிறேன்"

"அப்படியா? மரச் சாமான் வியாபாரம் மட்டும் சரிவர நடந்து வருகிறதா?"

"ஆமாம்; அதனால்தான் வீட்டிலிருக்கும் என் சாமான்களை விற்றுக் கொண்டு வருகிறேன்!"

●

## என்ன செய்வது?

"அவர்களிருவரும் நாற்காலிகளைத் தூக்கிச் சண்டை போட்டுக் கொண்டிருந்ததை நீ பேசாமல் பார்த்துக் கொண்டா இருந்தாய்? ஏன் சண்டையை நிறுத்தக் கூடாது?"

"நான் என்ன செய்யட்டும்? அங்கே இன்னொரு நாற்காலி இல்லையே!"

●

## பேஷ்!

"என்ன அப்பா, ரொம்ப 'அவசரமாகப் போகிறாயே! தலை போகிற காரியமா?"

"ஆமாம், தலைபோகிற காரியந்தான்! ஊரான்காரன் என்னைப் பார்க்கும்போதெல்லாம் தலையை வெட்டிக் கொள்ளச் சொல்லிக் கழுத்தை அறுக்கிறான்! அதற்குத்தான் இத்தனை அவசரமாகப் போகிறேன்!"

## யாருக்கு மருந்து?

டாக்டர்!—உங்கள் கணவர் நன்றாய் இளைப்பாற வேண்டும். இதோ, நன்றாய்த் தூக்கம் வருவதற்கு மருந்து கொடுத்திருக்கிறேன்...!
அவள்:— எப்பொழுதெல்லாம் அவருக்கு இந்த மருந்தைக் கொடுக்க வேண்டும்?
டாக்டர்:—இந்த மருந்து அவருக்கல்ல; உங்களுக்குத்தான்!

●

## வேண்டாதவள்!

கல்யாண வீட்டில் ஒருவர் (அப்பொழுது தான் வந்துகொண்டிருக்கும் ஒரு ஸ்திரீயைப் பார்த்து):—வாருங்கள், வாருங்கள்! நீங்கள் பெண்ணுக்கு வேண்டியவளோ?
ஸ்திரீ:—இல்லை! நான் கல்யாண மாப்பிள்ளையின் தாயார்!

●

## விடுதலை இல்லையா?

ஜெயில் அதிகாரி:—உன்னை இன்று முதல் விடுதலை செய்தாயிற்று. நீ போகலாம்.
கைதி:—எஜமான், தயவு செய்து என்னை என் பெற்றோர்கள் இருக்கும் இடத்துக்கு அனுப்பிவிடுங்கள்!
ஜெயில் அதிகாரி:—விலாசம் என்ன?
கைதி:—வார்ட் நெம்பர் எழுபத்தெட்டு. ஸெண்ட்ரல் ஜெயில், திருச்சிராப்பள்ளி.

●

## ஏன் குறைந்தது?

வாடிக்கைக்காரர்:— நான் நேற்று உன்னிடம் ஒரு டஜன் மாம்பழம் வாங்கினேன். ஆனால், வீட்டுக்குப் போய் எண்ணிப் பார்க்கும்போது 11 பழங்கள்தான் இருந்தன. ஒரு பழம் எங்கே?
பழக் கடைக்காரர் :—ஒரு பழமா! — அது ரொம்ப அழுகிப் போயிருந்தது. நீங்கள் வீட்டுக்குப் போய் அதைத் தூக்கி எறிவதற்குப் பதிலாக நானே அதை இங்கே எறிந்து விட்டேன்!

●

## ரொம்ப சரி!

நகரவாசி:—இந்தச் சாலை எங்கே போகிறதென்று உனக்குத் தெரியுமா?



கிராமவாசி (சிறிது யோசனை செய்து):— எனக்குத் தெரியாது; அது எப்பொழுதும் இங்கேதான் இருக்கிறது!

# தலையெழுத்து!

நாரீசன்

"கர்மம்! கர்மம்! எல்லாம் என் தலையெழுத்து, ஸார்! என் தலையெழுத்து!" என்று 'படீர், படீர்' என்று தலையில் அடித்துக் கொண்டு ஆயாசத்துடன் வேதாந்த தத்துவ ஆராய்ச்சியில் இறங்கும் பிரகிருதிகளைச் சர்வ சாதாரணமாக எங்கும் பார்க்கலாம். அவர்கள் தங்கள் தலையைத்தான் அடித்துக் கொள்கிறார்களா, அல்லது அதில் எழுதியிருப்பதாகச் சொல்லும் தலையெழுத்தைத்தான் அடித்துத் தமது கஷ்டத்தைத் தீர்த்துக் கொள்கிறார்களா என்பதை அவர்களிடம்தான் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

மனக் கசப்பு மிகுந்த குடும்பம் ஒன்றிலிருக்கும் நாட்டுப் பெண், தனது மாமியாரிடம் தான் கஷ்டப்படுவதற்குத் தன் தலையெழுத்துதான் காரணம் என்று நினைக்கிறாள்; மாமியாரோ தனக்கு இம்மாதிரி அதிகப் பிரசங்கியான நாட்டுப் பெண் கிடைத்ததற்குத் தன் தலையெழுத்துத்தான் காரணம் என்று கூறுகிறாள். ஆனால் பிள்ளையோ, வீட்டில் எப்போதும் சண்டையும் பூசலும் மிகுந்து தனது அமைதியான வாழ்க்கை சீர்குலைவதற்குத் தன் தலையெழுத்துதான் காரணம் என்று நினைக்கிறான்!

யார் கூறுவதை நாம் ஏற்றுக்கொள்வது? மூவருக்கும் ஒரே மாதிரியாகவா தலையில் எழுதியிருப்பான், அந்தப் பிரம்மன்?

தலையெழுத்தைக் கண்ணால் கண்டவர்கள் யாருமில்லை. அது என்ன பாஷையில் எழுதியிருக்கும் என்பதும் ஒருவருக்கும் தெரியாது. ஆனால் அதற்குப் பிரம்ம லிபி என்று மட்டும் பெயர் வைத்து விட்டார்கள். ஒருவனுடைய தலையெழுத்து அவனுக்குத் தெரியாமலிருப்பதில்தான் வாழ்க்கையின் தத்துவம் இருக்கிறதென்றும், அவனுக்குத் தன் தலையெழுத்தைப் பற்றித் தெரிந்திருந்தால், பின்னால் வரப்போகும் துக்கத்தைப் பற்றி முன் கூட்டியே அறிந்து அதே கவலையாயிருப்பான் என்றும் ஞானிகள் கூறுகிறார்கள்.

ஆனாலும் அந்த மண்டையெழுத்தைப் படித்துச் சொல்லக் கூடிய மகானுபாவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் நமது தலையைப் பார்த்துச் சொல்லுவதில்லை; நமது கைகளைப் பார்த்தோ, முகத்தைப் பார்த்தோ, அல்லது ஜாதகத்தைப் பார்த்தோ நமது தலையெழுத்தைக் கணித்து விடுகிறார்கள். தலையெழுத்து எப்படியிருந்தாலும் வாழ்க்கையின் பலாபலன் இவர்கள் கையிலிருக்கிறது. பூலோக பிரம்மாக்கள் இவர்கள்!

சிலர் இருக்கிறார்கள், அவர்களுக்குத் திடீரென்று தலையெழுத்து இப்படித்தானிருக்கும் என்று ஞானோதயமாகி விடுகிறது. உதாரணமாக, இந்த வாத்தியார்களைப் பாருங்கள்: தங்கள் சிஷ்யர்கள் எழுதின எழுத்தைக் காணும்போது அவர்களுக்குத் தலையெழுத்தின் ஞாபகம் வரத்தான் செய்கிறது. "உன் எழுத்தோ, மண்டையெழுத்தோ!" என்று உறுமுகிறார் வாத்தியார். தம் சிஷ்யக் குஞ்சுகள் சிருஷ்டி கர்த்தாவான அந்த நான்முகனையே எழுத்தில் பின்பற்றுகிறார்கள் என்று அவர் சந்தோஷப்படாமல், அவைகளைப் பார்க்க நேரும் தம் தலையெழுத்தை நொந்து கொள்கிறார்!

இதுபோலவே டாக்டர்கள் எழுதிக் கொடுக்கும் 'பிரிஸ்கிரிப்ஷ'னைக் காணும் நோயாளிகளுக்கும் தலையெழுத்தின் ஞாபகம் வருகிறது. ஆனாலும் பிரம்ம லிபியையே தோற்கடிக்கும் அந்த எழுத்துக்களைப் படித்துப் புரிந்து கொண்டு மருந்தை ஊற்றிக் கொடுக்கும் 'கம்பௌண்டர்'களின் சக்தியைப் பற்றி என்னென்று சொல்வது?



மருந்தை வாங்கிச் சாப்பிட்டு விட்டு உயிருடனிருக்கும் நோயாளிகளின் தலையெழுத்தின் கெட்டியைப் பற்றித்தான் என்ன சொல்வது!

"டேய்! உன் தலையில் எழுத்தாணியைத் திருப்பிக் கொண்டு எழுதி விட்டாண்டா, அந்தப் பிரம்மன்!" என்றும், "உன் தலையில் மொண்ணை எழுத்தாணியால் எழுதி விட்டான்!" என்றும் சர்வ

சாதாரணமாக ஜனங்கள் கூறுவதைக் கேட்கலாம். அப்படியானால் பிரம்மன் அந்தக் கர்நாடகப் பேர் வழியா யிருப்பார் போலிருக்கிறது. இந்த இருபதாம் நூற்றாண்டில் கூடவா அவர் அந்த எழுத்தாணியைக் கட்டிக் கொண்டு அழவேண்டும்? ஆயுசு பரியந்தம் மையே போடத் தேவை யில்லாத, எப்போதும் மழுங்காத அற்புதமான பேனாக்களின் விளம்பரங்கள் இன்னும் அவருடைய கண்ணில் படவில்லையா? அவரிடம் மட்டும் அம்மாதிரி பேனா ஒன்று இருந்தால் எவ்வளவு சௌகரியமா யிருக்கும்? மொண்ணை எழுத்தாணியால் எழுதி, எழுதியவருக்கும் எழுதப்பட்டவனுக்கும் கிடைக்கும் வசை மொழியை ஒருவாறு தவிர்க்கலா மல்லவா?



அதிசயம் என்னவென்றால் மனிதர்களுக்குக் கஷ்ட காலம் வந்தால்தான் தலையெழுத்தைப் பற்றி சிந்தித்துப் பார்க்கிறார்கள். அதையும், அதை எழுதியவரையும் நொந்து கொள்கிறார்கள். ஆனந்தமாகக் காலம் தள்ளும்போது அதன் ஞாபகமே வருவதில்லை; அதை உதாசீனம் வேறு செய்கிறார்கள். உதாரணமாக ஏழ்மை ஸ்திதியி லிருக்கும் ஒருவன் பணக்காரனாகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் அப்படியானதற்குத் தன் தலையெழுத்துத்தான் காரணம் என்று கூறுவதில்லை, தன் முயற்சியே காரணம் என்கிறான். இது அவனுடைய தலையெழுத்தின் தலையெழுத்தா யிருக்குமோ!

தலையெழுத்து என்றவுடன் சிலருடைய பெயர்களுக்கு முன்னால் காணப்படும் எழுத்துக்களின் மேல் சிந்தனை செல்வது இயற்கை. ஒருவரது பெயருக்கு முதலில் காணப்படும் தலையெழுத்துக்களைக் கொண்டே அவர் இன்னார் என்பதனைக் கணித்து விடலாம். உதாரணமாக ஒருவருடைய பெயருக்கு முன்னால் குறைந்தது அரை 'டஜன்' எழுத்துக்க ளிருக்கின்றனவா? சரி, அவர் நாட்டுக்கோட்டை செட்டியாராகத்தா னிருக்க வேண்டும் என்று நிர்மாணமாகக் கூறி விடலாம். மேலும் அவர்கள் இரட்டை எழுத்துக்களைத் தலையெழுத்துக்களாக வைத்துக் கொண்டிருக்கும் அதிசயத்தையும் காணலாம். உதாரணமாக அழ. பள. கரு. அர. சித. தரு. கருப்பன் செட்டியார் என்ற பெயரைக் கவனியுங்கள்.

கர்விதமாக ஒரு எழுத்தைத் தலையெழுத்தாக வைத்துக் கொண்டிருப்பவர்கள் பெரும்பாலும் உத்தியோகஸ்தர்களாக இருப்பார்கள்.

ஆனால் இந்த சங்கீத வித்வான்களிருக்கிறார்களே, அவர்கள் போக்கே தனி. தங்கள் பெயர்களுக்கு முன்னால் அவர்கள் தலையெழுத்துக்களை உபயோகிப்பதில்லை; தங்கள் ஊர்களின் பெயர்களையே இணைத்து விடுகிறார்கள். தலையெழுத்தோடு இவர்களின் பெயர்களைச் சொன்னால் ஒருவருக்கும் இன்னாரென்று தெரிவதில்லை. ஊர்ப் பேருடன் கூடிய பெயரைச் சொன்னால் தான் தெரிகிறது.

நான் இப்படியே எழுதிக் கொண்டே போகலாம். அப்படி எழுதுவது என் தலையெழுத்து. ஆனால், இதைப் படிக்கும் நீங்கள் உங்கள் தலையெழுத்தை நொந்து கொள்ளாமலிருக்க வேண்டுமே!

## அறிவிப்பு

1946-ம் வருஷத்துப் போட்டிக் கதைகளில் இரண்டாவது பரிசுக்குரியதாக வெளியான 'கண்ணாமூச்சி' என்ற கதை ஏற்கெனவே "வசந்தம்" என்ற மாத சஞ்சிகையில் வெளியாகி யிருப்பதாகத் தெரிகிறது. எனவே அதற்குப் பரிசு அளிக்கப்படவில்லை. அதற்குப் பதிலாக, பிரசுரிப்பதற்கென்று எடுக்கப்பட்டுள்ள கதைகளில் ஒன்றுக்குப் பரிசு அளிக்கப்படும். "எந்தக் கதைக்கு?" என்பது பின்னர் அறிவிக்கப்படும்.



# உங்கள் உணவுக் கவலை தீர்ந்தது!



நன்கு பரிசோதனை செய்து பார்த்ததில் நம்முடைய உணவு தேகாரோக்யத்திற்கு தேவையான சத்துப்பொருள்கள் குறைந்ததாகவே இருக்கின்றது.

சமீபத்தில் நடத்தப்பட்ட போஷிப்பு உணவு ஆராய்ச்சிகளில் நமது தேகாரோக்ய உணவுகளில் உடலை வளர்க்கும் புரோடீன், சத்து நிறைந்த விட்டமின், பலம்தரும் கொழுப்பு, கார்போ ஹைட்ரேட்ஸ் முதலியவைகளை நமது உணவோடு சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லியுள்ளார்கள். தற்காலத்து நிபுணர்கள் நமது உணவின் குறைபாடுகளை நிறைந்த போஷிப்புகளைச்சேர்த்து சரிசெய்து கொள்ளலாம் என்று கண்டுபிடித்துள்ளார்கள். அதாவது புரோடீன், விட்டமின் உலோகச்சத்துக்கள் முதலியவைகள் சம்பந்தப்பட்ட உணவுகளைக்கொண்டு சரிசெய்து கொள்ளலாம்.

மெக்லெக் கம்பெனியார் இப்படிப்பட்ட போஷிப்பு உணவுகளை குழந்தைகள், பெண்கள், ஆண்கள் முதலிய சகலருக்கும் தேகாரோக்யத்தை அளிக்கும் படியாக முதன்முதலாக செய்துள்ளார்கள். இவர்களின் போஷிப்பு உணவுகளை ஆராய்ந்தறிந்த நிபுணர்கள் நம்முடைய உணவுகளின் குறைபாடுகளுக்கு முற்றிலும் ஏற்றவை என்று தெரிவித்திருக்கிறார்கள்.

**மெக்லெக் புரோடீன் ஃபுட்:** வயதானவர்களுக்கு உடல் வளர்க்கும் சத்துள்ள புரோடீன்சாரம்கொண்டது.

**மெக்லெக் கிரேன் ஃபுட்:** குழந்தையின் உணவில் புரோடீன் குறைபாடுகளை நீக்கி போஷிக்கும் சாரம் கொண்டது.

**மெக்லோவிட்ஸ்:** விட்டமின் சத்துக்கள் உலோக சத்துக்களின் சாரங்களைக்கொண்டு வயது வந்தவர்களுக்கு உணவுக்குறைவை நீக்கி புஷ்டியை அளிப்பது.

**சிரப் கால் லிடஸ்:** விட்டமின் சத்துக்களும் உலோகசத்தும் நிறைந்தது. குழந்தைகளுக்குகந்தது.

**பொலிஜெல் அல் பெப்டோ ஜெல்:** நோய்வாய்ப்பட்டவரா சிகிச்சை பெறுபவர்களுக்கு ஏற்ற உணவு.

விவரங்கள் கொண்ட புத்தகம் வேண்டுவோருக்கு இலவசமாக அனுப்பப்படும். எழுதுங்கள்







உணவின் குறைபாடு உள்ள உணவுச்சத்துக்களை அளிப்பவை.

**தி மெக்லெக் நியூட்ரிமெண்ட்ஸ் அண்ட் பார்மஸ்யூடிகல்ஸ் லிமிடெட்**

99-A, ஆர்மீனியன் தெரு, ஜி. டி. மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

# கோகுல்

சந்தனாதித் தைலம்

அரைக்கீரை விதைத் தைலம்

கூந்தல் தைலம்







எங்கள் தயாரிப்புகள் ஒவ்வொன்றிலும் கோகுல் டிரேட் மார்க் இருப்பதை கவனியுங்கள்.

**டி.எஸ்.ஆர் & கோ**
**கும்பகோணம்.**

மதராஸ் ஏஜண்டு:
**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**
**பைகிராப்ட்ஸ் ரோடு,**
**திருவல்லிக்கேணி :: மதராஸ்**

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு:
**B. பாலபட்டாபி,**
**வைசியாள் தெரு, கோயமுத்தூர்**

---

# உலகில் மிகச் சிறந்த பௌண்டன் பேனா

ஏனென்றால் எல்லா சீதோஷ்ண ஸ்திதியிலும் தன்மையை இழக்காமலிருக்க விசேஷமாக ப்ளாட்டினம் தோய்க்கப்பட்டிருக்கிறது — உறுதிக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறது.

ஏனென்றால், உலகத்தில் கோடிக் கணக்கானவர்களுக்கு இருபத்தைந்து வருஷங்களாக ப்ளாட்டினத்தின் மேலே ஒரு விசேஷ மோஸ்தர் ஏற்பட்டிருக்கிறது.

ஏனென்றால், கெடுவதற்கு ஆதாரமே இல்லாமல், எந்த விதமான மசியிலும் நன்றாக எழுதக் கூடியது.

ஏனென்றால், இந்த ஏற்றமான விலையிலும் உலகில் அதிகமாக வாங்கி வழங்கப்படுகிறது.



விலை
ரூ. 3/1

**GOLDEN**
**Platignum**

கோல்டன்
**ப்ளாட்டினம்**

இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்டது

வியாபார சம்பந்தங்களுக்கு கீழ்க்கண்ட பூரண உரிமையாளர்களுக்கு எழுதவும்:
**முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்**
குவீன்ஸ் மான்ஷன்
பாஸ்டியன் ரோடு, பம்பாய்

Ad. No. PI-R

REGD. NO. M. 4392

License No. 18
Licensed to post without prepayment



# ஸ்நான ஒழுங்கு முறை...

முதன் முதலில் [illegible] வெந்நீரில் ஸ்நானம் (அல்லது ஷவர் குழாயடியில் குளியலாக); அடுத்தபடி நறுமணங்கமழும் கோட்டி டால்க் பவுடர் போட்டுக்கொள்ளவேண்டும். ஸ்நானஞ்செய்த சுகமும் புதுமையும் நாள் பூராவும் நீடித்திருக்க அதுதான் வழி! சருமத்திற்கு அவ்வளவு சுகமும் இன்ப உணர்ச்சியூட்டும் நறுமணமுமுடைய கோட்டி டால்க். வாழ்க்கையை ருசிகரமாக்கும் ஒரு சில ஆடம்பர வஸ்துக்களில் ஒன்றாகும் — அது அழகுக்கு மணமும் ஊட்டுவது.




Coty

**கோட்டி டால்க்**

ஏஜண்டுகள் :

டி. ஏ. டேய்லர் & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

100, அரமனைக்காரத் தெரு, ஜி. டி., மதராஸ்